


# ஸப்தகிரி

ஸ்ட், 1988

விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்




**கல்யாணாநாமவிகலநிதி: காபி காருண்யஸீமா**

**நித்யாமோதா நிகமவசஸாம் மௌளிமந்தாரமாலா,**

**ஸம்பத் திவ்யா மதுவிஜயிந: ஸந்நிதத்தாம் ஸதா மே**

**ஸைஷா தேவீ ஸகலபுவநப்ரார்த்தநாகாமதேநு:**

*மங்களங்களுக்குக் குறையாத புதையலும், சிறந்ததொரு கருணையின் எல்லை நிலமும், வேதவாக்குகளுக்கு எப்பொழுதும் வாசனையுள்ள தலையிற்சூடும் தெய்விக மலர்மாலையும், மதுஸூதனனுக்கு சிறந்த செல்வமும், எல்லா உலகங்களுக்கும் கோரியதைக் கொடுக்கவல்ல காமதேநுவுமான அத்தகைய இந்த பிராட்டி எனக்கு எப்பொழுதும் ஸாந்நித்யம் கொண்டருளுக.*

*ஸ்ரீ ஸ்துதி-24.*

ஆகஸ்ட் 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 3

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீவரலக்ஷ்மி
சித்திரம் ; திரு. ஜே. ஜெகதீஷ்

2-ம் பக்கம் : திருமலைக்கு இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் வருகை புரிந்தபோது.

3-ம் பக்கம் : திருமலைக்கு ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் வருகை புரிந்த போது.

பின்னட்டையில் : திருச்சானூர் ஸ்ரீபத்மாவதித்தாயார் திருக்கோயிலில் 'கோடி குங்குமார்ச்சனை' நடைபெற்றபோது.

சிறப்பாசிரியர்
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

இந்து சமயப் பண்டிகைகள் யாவும் உடலை வருத்தி உள்ளத்தைத் திருத்தும் முயற்சியில் விளங்கவில்லை. அவை உடலைத் திருத்தி உள்ளத்தை உயர்த்தும் பாங்கில்தான் திகழ்கின்றன என்பதை ஒவ்வொரு பண்டிகையினையும் கூர்ந்து நோக்கின் விளங்கும். நேரம் குறித்து, முறை வகுத்து பண்டிகைகள் உருவாக்கப்பட்டு, அவற்றின்மீது இந்து சமயம் உருவாக்கப்பட்டோ, வளர்ந்திடவோ இல்லை. தான் மகிழ்ச்சியடைய, பின்னர் அதனைப் பிறரோடு பங்கிடவுமே இந்துக்கள் தங்கள் பண்டிகைகளைக் கொண்டாடினர் - கொண்டாடுகின்றனர். கோயில்களில் பண்டிகைகள் கொண்டாடு வதற்குக் காரணம் பக்தி நெறி பரப்பமட்டுமன்று. வாழ்க்கை நெறி - சமூக நெறி உயர்த்தவேயாம். அதற்கு முன்பு தனிமனிதனின்-தனி ஒரு குடும்பத்தின் வாழ்க்கை நெறியினைச் செம்மைப்படுத்தும் முகத்தான் 'பல பண்டிகைகள் வீட்டளவில் கொண்டாடப்பட பல புராணங்களும், இதிஹாஸங்களும், சமய இலக்கியங்களும் இதற்கு வழிவகுத்துள்ளன.

நாளும் ஆதவனுடன் ஆயிரம் பிரச்சனைகள் இம்மனித சமூகத்தைத் தாக்க ஆரம்பிக்கின்றன. பிரச்சனைகள் தனிமனிதனால் தீர்க்க முடியாத தருணத்து - அது பலருடைய பிரச்சனைகளாகிவிடும் போது, அங்கு அவை ஒரு சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திடாவிட்டாலும், ஒரு சமுதாய விழிப்புணர்ச்சியினையாவது தூண்ட அமையாது, அச்சமுதாய சீரழி வுக்கு வித்திடுகின்றது என்பதை இன்று நாட்டில் நடந்துவரும் வன்முறைகளும், கிளர்ச்சிகளும் கட்டியம் கூறுகின்றன. ஆகவே ஒரு சமுதாயத்தின் வளம், ஒரு தனிமனிதனின் வாழ்க்கை நெறியில் அமைந்து கிடக்கின்றது என்பது தெள்ளத் தெளிவு. இந்நிலையில் ஒவ்வொரு இந்துக் குடும்பத்தின் பங்கு பெரிதும் பேசப்படுகின்றது.

குடும்பம் ஒன்றில் பலர் உலவினாலும் அவர்களுக்கு வாழ்க்கையில் ஒரு பிடிப்பினை ஏற்படுத்தித் தருவது பல உறவுகளில் அக்குடும்பத்தில் திகழ்ந்துவரும் பெண்கள்தாம். வீட்டிற்கு வெளியே நடமாடும் தந்தையின் போக்கும், குடும்பத்தின் உள்ளே விளங்கும் தாயின் போக்கும், அவர்களுடைய குழந்தைகளின் ஆரோக்யமான எதிர் காலத்தை நிர்ணயிக்கின்றன. இந்நிலையில் ஓர் உண்மையான இந்துக் குடும்பப் பெண்களின் பங்கென்ன, கடமை யென்ன என் பதைச் சிந்தித்து செயல்பட வேண்டிய கட்டாயச் சூழ்நிலையில் இன்று நாம் உள்ளோம். முதல் கோணல் முற்றும் கோணலாக அமைந்து விடுவது போல, குடும்பத் தலைவி தன் பொறுப்புக்களிலிருந்து தவறிவிட்டால், தத்தளிக்கும் அக் குடும்பத்தைச் சரிபடுத்த, ஒரு தலைமுறையினையே பலி கொடுக்க வேண்டியிருக்கும். இதனை மனதிற்கொண்டுதான் இந்து சமயத்தின் மூத்த காவலர்கள் பலர் அன்றே நம் வாழ்வில், குடும்ப அளவில் சமய உணர்வினை, அதனை ஒரு வாழ்க்கை இலக்கணமாக வகுத்து-வளர்த்திட பல சமய விழாக்களை ஏற்படுத்தினர். இவற்றுள்ளும் பெண்களே முழுப் பங்கு ஏற்கும் வகையில், பெண்களின் முக்கியத்துவத்தை உணர்த்திடும் வகையில் பல பெண் தெய்வங்களின் தனி சமய விழாக்கள் ஏற்படுத்தப்பட்டன.

எப்போது, தம் கருணை உள்ளத்தால் நம்மைப் படைத்த அப்பரமனை மறக்கிறோமோ அன்றுதான் நமது மரணம் என்பதை "ஸ்ரீ பகவத் விஸ்மரண மேவ மரணம்" என்ற அடியாலும், தெய்வ சிந்தனையே மனிதனை வாழ்விக் கும் என்பதை "ஸர்வதா ஸர்வ கார்யேஷு நாஸ்தி தேஷாம மங்களம்;, யேஷாம் ஹ்ருதிஸ்தோ பகவான் மங்களாய தனம் ஹரி:" என்ற அடிகளாலும் ஆதிசங்கரர் கூறுகிறார். இவ்வகையில் அக்கருணைமிகு மூல சக்தியானது கல்வியை யும் ஞானத்தையும் கலைமகள் வடிவிலும், தீயோரைத் தண்டித்து நல்லோரை காத்தற்கு மலைமகள் வடிவிலும், செல்வச் செழிப்பிற்குத் திருமகள் வடிவிலும் இவ்அவனியைக் காத்து வருகிறாள். அவள்தம் கருணை உள்ளத்தை மனதிற்கொண்டு, மங்கலப் பெண்கள் தங்கள் வீடுகளில் தலைவன் உள்ளிட்டுப் பலரும் மகிழ்ந்திட, அன்பு, புகழ், அமைதி, இன்பம், வலிமை ஆகிய புகழ்க்குணங்கள் வீட்டில் தழைத்திட வழிவகுப்பது, திருமகளின் வழிபாடான வரலட்சுமி விரதமாகும். மேலும் அறிவு, செல்வம் நோயற்ற வாழ்வு, தானியம் வெற்றி ஆகிய தனிமனிதனுக்குத் தேவையான அருட்செல்வங்களைத் தந்து அவன் மூலம் ஊரும், நாடும் ஆக்கமும் ஊக்கமும் பெற்றிட உறுதி அளிக்கும் பண்டிகையாக இவ்விரத நிகழ்ச்சி திகழ்கின்றது. அருளும் பொருளும் தந்திடும் அவ்ஆதிசக்தியின் பெருமையினை மனதிற்கொண்டே, அத்திருமகளின் கடைக்கண் பார்வை இப்புவிமீதும் விசிடவே, தி. தி. தேவஸ்தானம் அண்மையில் திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதித் தாயார் திருக்கோயிலில் 'கோடி குங்குமார்ச்சனை' எனும் சமய விழாவினை நடத்தியது நாடறிந்ததே.

பெண் தெய்வ வழிபாட்டைப் புகுத்தி, பெண்மையைப் பெருமைப்படுத்தியது மூலம் பெருமை பெற்ற இம் மண்ணில் அப்பெண்மை சிறுமைப்படுவதோ, பெண்கள் தங்கள் புகழ்க் குணங்களை இழத்தலோ பெரும் தீங்கிற்குத்தான் வழிகோலும் என்பதை மனதிற்கொண்டு, பெண்கள் தங்கள் கடமையினையும் ஆற்றலையும் அறிந்துணர்ந்து செயல்படு தலும், அதற்கு ஆணினம் தக்க துணைபோதலுமே இது போன்ற பண்டிகைகளுக்குப் பெரிதும் பெருமை சேர்க்கும் என் பதை உணர்வோமாக!

# செய்திச் சுருக்கம்

புஷ்ப பல்லக்கு :

16-7-88 அன்று திருமலைக் கோயிலில் ஆனிவார ஆஸ்தானம் எனும் வருடாந்திர கோயில் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட புஷ்ப பல்லக்கில் உற்சவர் எழுந்தருளி திரு வீதி திருவலம் கொண்டருளியது பக்தர்களின் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமைந்தது. இப்புஷ்ப பல்லக்கானது 20 வகைகளைக் கொண்ட சுமார் 1500 கிலோ எடையுள்ள மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டது. இவ்வண்ண மலர் அலங்காரம் 71 ஊழியர்களால் மேற்கொள்ளப்பட்டது. சுமார் 14 கிருஹஸ்தர்கள் தலா ரூ. 1000/- செலுத்தி இவ்வைபவத்தில் பங்கேற்றனர்.

கோடி குங்குமார்ச்சனை :

18-7-88 முதல் 7-8-88 வரை திருச்சானூரில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பத்மாவதித் தாயார் திருக்கோயிலில் உலக நன்மைப் பொருட்டு கோடி குங்குமார்ச்சனை எனும் சிறப்பு சமய விழா வெகுச் சிறப்பாக நடைபெற்றது. காலையிலும் மாலையிலும் நாளுக்கு 5 இலட்சம் மந்திரங்கள் விதம் 21 நாட்களுக்கு இக்குங்குமார்ச்சனை நடைபெற்றது. இதுபோது கோயில் அரங்கினுள் 9 ஹோம குண்டங்கள் அமைக்கப்பட்டன. கர்னாடக மாநிலத்தைச் சார்ந்த ஸ்ரீ ராமஸ்சுவாமி பட்டர் தலைமையில் 83 ருத்விக்குகள் இதில் பங்கேற்றனர். 18-7-88 அன்று தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, குழு உறுப்பினர் திரு. எல். வி. ராமய்யா, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சிஎச். வெங்கடபதி ராஜு ஐ.ஏ.எஸ். மற்றும் பல தேவஸ்தான உயர் அலுவலர்கள் பலரும் ஆரம்ப நாள் நிகழ்ச்சிகளில் பங்கேற்றனர். இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்களும் 22-7-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்த சமயத்தில், இந்நிகழ்ச்சியிலும் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

திருமலையில் ஆந்திர முதல்வர்

ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் 30-6-88 மற்றும் 1-7-88 தேதிகளில் திருமலைக்குத் தன் குடும்பத்தாருடன் வருகை புரிந்தார். திருமலைக் கோயில் அரங்கினுள் ஸ்ரீ ரங்கநாயக மண்டபத்தில் முதல்வருக்கு கோயில் மரியாதைகள் அளிக்கப்பட்டன. அதுபோது ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்ய நாராயணா, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, குழு உறுப்பினர் திரு. தேவநாதன் மற்றும் தி.தி.தே. உயர் அலுவலர்களும் உடன் இருந்தனர். அன்று மதியம், திருமலையில் ரூ. 15 கோடி செலவில் தி. தி. தே. தர்ம பிரசார பரிஷத் துறைக்கெனக் கட்டிடம் ஒன்று கட்டப்படவிருக்கும் இடமான தர்மகிரி எனும் இடத்தைப் பார்வையிட்டார்.

ஃ ஃ ஃ

அண்மையில் ஆந்திர மாநிலம் ஓங்கோலில் தி. தி. தேவஸ்தானத்தார் கட்டிய திருமண மண்டபத்தினை ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் திறந்து வைத்தார்.

வாகன நன்கொடை :

சென்னை டி. வி. எஸ். நிறுவனத்தார் தாங்கள் புதியதாக உற்பத்தி செய்த ரூ. 23,000 பெறுமான சூப்ரா மோட்டார் சைக்கிள் மற்றும் மொபெட் ஆகிய இரு ஊர்திகளை ஏழுமலையானுக்குக் காணிக்கையாக வழங்கினர். அந்நிறுவனத்தின் மேலாண்மை இயக்குநர் திரு. வேணு ஸ்ரீநிவாசன் அவர்களிடமிருந்து, இவ் இருஊர்திகளைதி.தி.தே.செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு அவர்கள் தி. தி. தே. சார்பில் பெற்றுக்கொண்டார்.

அலிபிரியில் :

திருப்பதி அலிபிரி எனும் மலையடிவாரத்தில் தி. தி. தேவஸ்தானம் 1008 அறைகளைக் கொண்ட ஒரு தங்கு மாளிகையினைக் கட்டி வருகின்றது. முதல் கட்டமாக விரைவில் 150 அறைகள் கட்டி முடிக்கப்பட்ட நிலையில் உள்ளன. இக்கட்டிடம் உணவு வசதிகளும், தனியார் பேருந்துகள் மற்றும் சிறிய ஊர்திகள் நிறுத்துவதற்கான இட வசதிகளையும் கொண்டிருக்கும்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் ரூ. 6 கோடி செலவிலும், திருமலையில் ரூ. 2.5 கோடி செலவிலும் 'பாதாள சாக்கடை'த் திட்டங்களைச் செயல்படுத்த தி. தி. தே. தீர்மானித்துள்ளது.

மற்றைய செய்திகள் :

திருமலையில் குடில் ஒன்றினைக் கட்டுதற்கு ஹைதராபாத்தைச் சார்ந்த திரு. பிரமோத் குமார் அகர்வால் அவர்கள் ரூ. 1.2 இலட்சம் நன்கொடை வழங்கியுள்ளார். இக்குடில் திருமலையில் சங்குமிட்டா பகுதியில் அமைக்கப்படலாம்.

ஃ ஃ ஃ

நாட்டில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபங்களில் சமய நிகழ்ச்சிகளை நடத்துவதற்காக, சம்பந்தப்பட்ட அமைப்பாளர்களுக்கு 25% சதவிகிதத்தில் அம்மண்டபங்களை வாடகைக்கு வழங்க தி. தி. தே. மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

# விசிஷ்டாத்வைதம்

அவதாரிகை :

நம் விசிஷ்டாத்வைதமானது சுருதிகள், ஸ்ம்ருதிகள் என்ற வேதத்தின் மூலமானதால், சுருதியைப் போல் இதுவும் அனுதியானது. வேதத்தில் கூறப்பட்டுள்ள வழி முறைகளை அனுஷ்டித்து வருவதால், இதற்கு வைதீகமதம் அல்லது சனுதன மதம் என்ற பெயர் ஏற்பட்டது.

அனுதியான இந்த வைதீக மதத்திற்கு குறுகிய நோக்கங்களைக் கொண்ட பிற மதங்களால் ஏற்பட்ட கலக்கத்தைப் போக்கி எல்லோரும் சுலபமாக, கைக்கொள்ளத் தக்கதாய் நிலைநாட்டிய பெருமை ராமாநுஜரையே சாரும். இவ்வாறு நிலை நாட்டிய விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை (ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தை) "எம்பெருமானுர் தரிசனம்" என்று பெயர் பெற்று, தமிழ்நாட்டிலும், வட நாட்டிலும் நன்ருகப் பரவியிருந்தது. வல்லபாசாரிய மதம், சைதன்ய மதம், நிம்பார்கள் மதம் என்றவை எல்லாம் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தையே கொண்டிருந்தது. இதனுல் எம்பெருமானுர்க்கு "தரிசன ஸ்தாபகாசாரியர்" என்ற பெயரும் ஏற்பட்டது.

விசிஷ்டாத்வைதத்திற்கு நம்மாழ்வாரை ஈன்ற முதல் தாய் என்றும், இராமானுஜரை "இதத்தாய்" (வளர்த்த தாய்) என்றும் கூறுவதுண்டு. இதனை ஸ்ரீபட்டர் அருளிச் செய்த,

"வான் திகழும் சோலை மதிளரங்கர்
வன்புகழ்மேல்
ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்-ஈன்ற
முதல் தாய் சடகோபன்-மொய்ம்பால்
வளர்த்த
இதத்தாய் இராமானுஜன்"

என்ற பாசுரத்தின் மூலம் அறியலாகும்.

எம்பெருமானுர், விசிஷ்டாத்வைத சித்தாந்தம் என்று புதிய மதத்தை ஏற்படுத்தவில்லை. இருந்தாலும் புதுமைக்கும் புதுமையாயும், பழமைக்கும் பழமையாகவும் இருந்த சித்தாந்தம் என்று செல்லும்படியாக, பிராணப் பிரதிஷ்டை செய்வித்து, புனருத்தாரணம் செய்து வைத்தார் என்பதே சாலப் பொருந்தும்.

இராமானுஜர் காலத்திற்கு வெகு காலம் முன்பே இருந்த வியாசர், போதாயனர், குஹதேவர், பாருசி, ப்ரம்ஹநந்தீ, டங்கர், த்ரமிடா சாரியர், பராங்குசர், நாதமுனிகள், ஆளவந்தார் முதலான பூர்வாசாரியர்களின் மதத்தையே பின்பற்றி, இராமானுஜரும் பூர்வாசாரியர்களின் சொற்களாலேயே, ஒவ்வொரு விஷயத்திற்கும் ப்ராமண ப்ரமேயங்களையும், தத்துவங்களையும் எடுத்துக் காட்டி விவரணம் செய்தார். உபதேச ரத்தின மாலையில் "முன்னேர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு" என்ற பாசுரத்தின்படி ஆசையுள்ளோர்களுக்கெல்லாம் உபதேசம் செய்து வந்தார். பழந்தமிழ் இலக்கியங்களிலும் சங்க கால நூல்களிலும், தொல்காப்பியத்திலும் திருமாலை வழிபடும் தெய்வமாகக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தம் பரவியிருந்தது என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றுகள் தருகின்றன.

அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும் :

அத்வைதம் என்ற பதத்தை "நத்வைதம் இதி" அத்வைதம் என்றும், விசிஷ்டாத்வைதம் என்ற பதத்தை 'விசிஷ்டஸ்ய அத்வைதம்' விசிஷ்டாத்வைதம் என்றும் பிரிவு படுத்திப் பெரியோர்கள் சொல்வார்கள்.

சித்தாந்தத்ரயம் என்று சொல்லப்படுவது மூன்ருகும். அவைகள் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்ற மூன்று சித்தாந்தங்களையும் குறிக்கும். உபநிஷதங்களிலுள்ள அபேத (பேதமில்லாத) வாக்யங்களை ப்ராதனமாய் எடுத்துக் கொண்டு மற்றவைகளை விட்டு விடவோ அல்லது அபேதமாய் (பேதமில்லாமல்) பொருள் கூறுவதுதான் அத்வைதமாகும். பேத வாக்யங்களை ப்ராதனமாய் எடுத்துக் கொண்டு, அபேத வாக்யங்களை விட்டுவிடவோ அல்லது பேதமாய் பொருள் கூறுவது த்வைதமாகும்.

வேதங்கள் உண்மையே எடுத்துச் சொல்லுகின்றன. அதனுல் பேத அபேத சுருதிகளின் உண்மையான உள் தத்வார்த்தம் என்னவாகஇருக்க வேண்டும் அல்லது என்னவாக இருக்க முடியும் என்று தீர்க்கமாய் ஆலோசித்து, பேத அபேத வாக்யங்கள் இரண்டையும் சமன்வயப்படுத்திப் பொருள் கூறி விளங்க வைப்பது

---

திரு. ஐ. கேசவ ஐயங்கார்,
அல்லூர்.

---

இராமானுஜ சித்தாந்தம் என வழங்கும் விசிஷ்டாத்வைதமாகும். பேத அபேதங்களை கூறும்வேதப்பகுதிகளைப் சமரசப்படுத்தி விசிஷ்டாத்வைத ரீதியாக பொருள் கூறுவதற்கு உதவியாய் இருக்கும் உபநிஷதப் பகுதியை 'கடக சுருதி' என்பர். கடகம் என்ற சொல் சேர்த்து வைப்பது, பொருந்த வைப்பது, சமநோக்கோடு பார்ப்பது என்று பொருள்படும்.

மேற்சொன்னவைகளை அனுசரித்தே சங்கரர், இராமானுஜர், மத்வாச்சாரியர் ஆக மூன்று மதாசாரியர்களும் தங்கள் சித்தாந்தப்படி பிரம்ம சூத்ரத்திற்கும், பகவத் கீதைக்கும் பாஷ்யங்களை அருளிச் செய்துள்ளனர்.

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை அறிந்து கொள்ள வேணுமேயானுல், நாம் முதலில் இதற்கு எதிர் தட்டான, அத்வைத சித்தாந்தத்தை அவசியம் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டியதாகிறது.

அத்வைதம் என்ற பதத்திற்கு இரண்டாவது (வஸ்து) என்று இல்லாதது என்று பொருள். பரப்பிரும்ஹம் என்கிற ஒரே பொருள்தான் உள்ளது. இதைப் போலவே வேறு பொருள் கிடையாது என்றே ஸஜாதீயமும், இதைத்தவிர வேறு பொருள் கிடையாது என்கிற விஜாதீயமும் ஆகும் என்று சொல்லப்படுகிறது. இந்த பிரும்ஹம் நிர்குணப் பிர்ம்மம் அதாவது எந்த விதமான குணங்களோடும் கூடியதில்லை. நாமரூபங்களும் இல்லை. மனதால் எண்ண முடியாதபடியால், 'அசிந்த்யம்' என்றும் வாக்கால் சொல்லி விவரிக்க முடியாதாகையால் 'அவாச்யம்' என்றும் ஸத் சித் ஆனந்தம் உண்மையானது அதாவது நித்யமாய் இருப்பது. கழிந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம் ஆகிய முக்காலங்களிலும் ஞானமயமானது, ஆனந்த மயமானது, தேஜோமயமானது. இந்த பிர்ம்மத்திற்கு 'மாயை' என்ற வஸ்துவின் சம்பந்தம் உண்டு. (விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் மூலப் பிருகிருதி என்பதைத் 'மாயை' என்று கூறுவதுதான் அத்வைதமாகும்). மாயை என்பதற்கு ஆச்சரியப்படும்படியான காரியங்கள் என்று பொருள் கூறலாம். இந்த மாயை தனக்கு ஆதாரமாயுள்ள ப்ரும்மத்தின் உண்மை ஸ்வரூபத்தை மறைக்கும் குணமுண்டு. ஸ்த்வ, ரஜோ, தமோ, குணங்களும் உண்டு. இந்த மாயையின் அதிக ஸத்வ குணம் உள்ள ஓர் அம்சமும், அதைவிட மிகக் குறைந்த, ஸத்வ குணமுள்ள அவித்யை என்ற ஓர் அம்சமும் உண்டு என்பர் சிலர். பஞ்ச பூதங்களும், இவற்றின் கோரிக்கையால் ஏற்படும் சராசரங்களாகிற நமக்குப் புலப்படும் இப்பிரபஞ்சமும், அதிலுள்ள எல்லா வஸ்துக்களும் இருந்த போதிலும், உண்மையில் அவைகள் இருப்பவை அல்ல. எப்படியெனின் நல்ல சூரிய ஒளியில் தோன்றும் கானல் நீர் போல் தான் என்கிறது அத்வைதம்.

ஜீவ தத்வம் :

அத்வைத சித்தாந்தப்படி, தத்வம் ஒன்றேதான் என்று கூறப்படுகிறது. ஜீவன் என்ற தனித் தத்வம் இல்லை. ஈஸ்வரனும்,ஜீவனும் ஆகிய இரண்டும் ஒன்றுதான். உதாரணமாக ஆகாசம் எங்கும் பரந்துள்ளபடியால் 'மகாகாசம்' என்றும், அதுவே ஒரு குடத்தில் உள் இருக்கும் இடத்தை 'கடாகாசம்' என்றும் பெயர் பெறுகிறது. ஒரே ஆகாசம்தான், பொருள்கள் அல்லது வஸ்துக்கள் அது இருக்கும் இடத்திற்குத் தகுந்தபடி பெயர் ஏற்படுகிறது. அதே போல் எங்கும் நிறைந்த பிரும்மம், இந்த தேகத்தில் உள்ள போது ஜீவன் என்ற பெயர் பெறுகிறது. கடம் உடைந்தால், குடத்திற்குள் இருக்கும் கடாகாசம் என்ற பெயரை விட்டு, மகாகாசத் தோடு கலந்து விடுகிறது. இதே விதமாய் சரீரத்தில் ஜீவன் என்னும் பெயர் கொண்ட ப்ரம்ஹம். சரீரம் அழிந்தவுடன் ப்ரம்மத்துடன் ஐக்யமாய் விடுகிறது.

மாயைக்கும் அவித்யைக்கும் தம் எதிரிலுள்ளதைக் கண்ணுடி போல் பிரதிபலிக்கும் தன்மையுள்ளது. அதிக ஸத்வமுள்ள மாயையால், பிரதிபலிக்கும் சைதன்யத்திற்கு 'ஈஸ்வரன்' என்றும், அவித்யையால் பிரதிபலிக்கும் சைதன்யத்திற்கு 'ஜீவன்' என்றும் பெயரிடப்படுகிறது. கண்ணுடிகளில் உள்ள தோஷங்களுக்கேற்ப பலதாய் தோன்றுவது போல் ஈஸ்வரனும், ஜீவனும் தோன்றுகிறார்கள். அவித்யா அம்சம் அநேகமிருப்பதால், ஜீவர்கள் எண்ணற்றவர்கள். அவித்யையில் மிகவும் குறைந்த ஸத்வமுள்ளதால், ஜீவர்கள் அக்ஞானமும், அல்பசக்தியுமுள்ளவர்கள் ஆகிறார்கள். ஜீவன் அவித்யையின் காரணத்தால், மறைக்கப்பட்டு தான் கர்த்தா, போக்தா என்று எண்ணிக் கர்மங்களைச் செய்து, கர்ம பலன்களை யனுபவிக்க ஸ்வர்க்கம், நரகம் சென்று, கர்ம பலனுக்குத் தகுந்த மாதிரி அனுபவித்து மறுபடியும் பிறக்கிருன். இந்த ஸம்ஸாரச் சுழலிலிருந்து விடுபட நித்ய, நைமித்ய கர்மாக்களையும், ஈஸ்வரனை உபாசித்தும், ஈஸ்வரனின் அம்ஸமாக ஏதாவது ஒரு மூர்த்தியை ஆராதித்து தகுந்த குருவை அடைந்து தத்மஸி முதலான மகாவாக்யங்களில் மேலான அர்த்தத்தை அறிந்து கொண்டு, அதே பாவனையில் ப்ரம்மம் என்ற எண்ணத்தை மனதில் நிறுத்தி ஆத்ம ஸாஷாத்காரம் பெற்று, ப்ராரப்த கர்ம பலன்களை ஒழிந்த பிறகு, ஞானத்தால் மோஷமேற்படுகிறது என்பது அத்வைத சித்தாந்தம்.

அத்வைதிகளின் சில முக்ய மகா வாக்யங்கள் :

'தத்வமஸி' 'அஹம்ப்ரம்மாஸ்மி', 'ஸர்வம் கல்விதம் ப்ரம்ம நேகநா நாஸ்திகிஞ்சன' 'அயம் ஆத்மா ப்ரம்மா, பிரம்மவித் பிர்ம்வை பவதி' என்பவனும்.

தேனீக்கள் பல புஷ்பங்களிலிருந்து ரசத்தைசேகரித்துத்தேனைஉண்டாக்குகிறது.ஆனுல் அந்தத் தேன் எந்த எந்த புஷ்பங்களிலிருந்து உண்டானது என்பது தெரியாமல் தேன் என்ற ஒரே பெயரை உடையதாகிறது. அதே போல பல நதிகளில் ஓடிவரும் ஜலம் கடலில் கலந்த பின், எந்த நதியின் ஜலம் என்று தெரியாதபடி ஒன்ருய் கலந்து விடுவது போல், ஜீவர்களும் ப்ர்ம்மத்தில் ஐக்யமாய் விடுகிறது.

'அகம்ப்ரம்மாஸ்மி' என்னும் வாக்யத்தை எடுத்துக் கொண்டு நான் ப்ரம்மம் ஆகிறேன் என்று சொல்வது அத்வைதம்.

'அயம் ஆத்மாப்ரம்மா' என்கிற சுருதி வாக்யத்திற்கு ஜீவனே ப்ரம்மம்

அல்லது பரமாத்மா என்று பொருள் கூறுகிறது அத்வைதம்.

'ப்ரம்மவித் ப்ரம்மைவ பவதி' என்பதற்கு, ப்ரம்ம ஞானத்தை அடைந்தவன் ப்ரம்மமே ஆகி விடுகிறன் என்பது அத்வைதம்.

அத்வைத சித்தாந்தத்தை ஞான மார்க்கம் என்கிற அத்வைத சித்தாந்தப்படி, பரமாத்மா நிர்க்குண ப்ரம்மம். அதாவது குணங்கள் ஒன்றும் இல்லாத பரம்பொருள். இவைகளனைத்தும் அத்வைத சித்தாந்தமாகும்.

**விசிஷ்டாத்வைதம் :**

இனி விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் பற்றி சிறிது விவரிப்போம். நமது சித்தாந்தமும் அத்வைத சித்தாந்தம்தான். ஆனல் நம் சித்தாந்தம், சில விசேஷண விசேஷ்யத்தோடு கூடியது. அத்வைத சித்தாந்தத்தில் கூறிய தத்வங்களையும், அபேதங்களையும் அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், சுருதிகளின் உண்மையான, உள் அர்த்த விசேஷங்களை சமன்வயப் படுத்தியும், பூர்வாசாரியர்களின் ஸ்ரீசூக்தி மூலமாயும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலிருந்தும், மேற்கோள் எடுத்துப் பொருள் கூறுவது தான் நம் விசிஷ்டாத்வைத சித்தாந்தம்.

விசிஷ்டம் என்றல் சேர்க்கை, சேர்ந்து இருப்பது என்று பொருள். நமது சிந்தாந்தப்படி சித், அசித், ஈஸ்வரன் என்ற மூன்று தத்வங்கள் உண்டு. இதையே 'தத்வத்ரயம்' என்பர். தத்வங்கள் மூன்றில் சித், அசித் என்கிற இரண்டு தத்வங்களையும் தனக்குச் சரீரமாக்கிக் கொண்டு தான் (ஈஸ்வரன்) சரீரியாக உள்ள பரமதத்வம் என்று கூறுவது விசிஷ்ட அத்வைதம். திருக்கச்சி நம்பிகள் மூலமாக, எம்பெருமாள் இராமானுஜருக்கு அறிவிக்கும்படியாக சொல்லிய ஆறு வார்த்தைகளில் முதலாவது 'அகமேவ பரத்வம்' நானேதான் (அதாவது விஷ்ணுவே தான்) பரத்வம் என்று கூறியதை குருபரம்பரப்பிராபவாத்திலிருந்து தெரிய வருகிறது.

சித் அல்லது சேதனன் என்றல் அறிவுடன் கூடிய ஜீவாத்மா. அசித் என்றல் அறிவில்லாத ஜடப் பொருள்களாகிய மூலப் பிருகிருதியும், அதன் பரிமாணங்கள் ஆகிற கர்மேந்த்ரியங்கள் ஐந்து, ஞானேந்த்ரியங்கள் ஐந்து ஆக பத்தும், மனதும், பஞ்ச பூதங்களும், அவற்றின் சேர்க்கையால் உண்டான மனித பசு பக்ஷி முதலான உடல்களைப் பெற்றவைகளும், இதர பொருட்களும்.

வேதங்களின் சிரம் என்றும், சிகரம் என்றும் போற்றப்படும் உபநிஷதங்களில் 'உண்மைப் பொருள் ஒன்றே தான், இரண்டல்ல என்ற அத்வைதக் கொள்கைகளைக் கூறும் வாக்யங்களுண்டு. இவ்வாக்யங்களைக் கொண்டு ஜீவனும், ப்ரம்மமும், ஒன்றல்ல இரண்டேதான் என்று வாதிப்பவர் த்வைதிகள். இக்கொள்கையையும் வலியுறுத்திக் கூறும் வாக்யங்களும் உபநிஷத்தில் காணப் படுகின்றன. இவ்வாறு முரண்படுவது போல் தோன்றும் உபநிஷத் வாக்யங்களைச் சமன்வயப்படுத்தி சமதர்ம நோக்கத்தோடும், பரந்த நோக்கத்தோடும் தெரிய வைப்பதுதான் விசிஷ்டாத்வைதம்.

ஈஸ்வரன் நாம ரூபங்களோடு கூடினவன்- மூன்று நபர்கள் ஒன்று கூடி பேசும்போது, தாங்கள் பார்த்த ஒந்தி என்னும் பிராணியை ஒருவர் மஞ்சள் நிறம் என்றும்,இரண்டாம் நபர் சிகப்பு நிறம் என்றும், மூன்றும் நபர் பச்சை நிறம் என்றும் சொல்லி ஒவ்வொருவரும் தான் பார்த்த நிறமே சரியானது என்று வாதித்தனர். அச்சமயம் நாலாவது நபர் வந்து விசாரித்து ஓந்தி நிறம் மாறக் கூடிய பிராணியாதலால் மற்றவர் மூவரும், ஓந்தியை தாங்கள் பார்த்த நிறத்திலேயே பார்த்திருக்கலாம் என்றும் விளக்கினர். பசுவில் பல நிறமுண்டு. ஆனல் பாவின் நிறம் ஒன்றேதான். இதே போல் எல்லா நாமங்களும் ரூபங்களும் கொண்டவன் ஈஸ்வரன். பகவானுக்கு ஆயிரம் நாமங்களுண்டு என்பதை விஷ்ணு சகஸ்ரநாமம் கூறுகிறது. பெரியாழ்வாரும் திருப்பல்லாண்டில், 5ஆம் பாசுரத்திலும் 'தொண்டைக் குலத்திலுள்ளீர் வந்தடி தொழுது ஆயிரம் நாமம் சொல்லி' என்கிருர். அதனல் எல்லா நாமங்களையும் ரூபங்களையும் கொண்ட ஈஸ்வரன் பக்தன் எந்த உருவில் காண விரும்புகிறனே அந்த உருவில் காட்சி கொடுத்து பக்தன் கூறும் பெயரையும் ஏற்றுக் கொள்ளுகிறன். இக்கருத்தையே நம்மாழ்வாரும் திருவாய் மொழியில்,

அவரவர் தமதமது அறிவறி வகை வகை
அவரவர் இறையவர் என அடியடைவர்கள்
அவரவர் அறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே" என்றும்,
"உளனெனில் உளன் அவனுருவம் இவ்வுருவுகள்
.................................
உளனென இலனென இவை குண முடைமையில்
உளனிருத கைமையோடு ஒழிவிலன் பரந்தே" என்றும்,

பொய்கையாழ்வாரும் தமது முதல் திருவந்தாதியில்,

தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்தது எப்பேர் மற்றப் பேர் தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ண மாழியானும்"

என்று கூறுவதையும் காணலாம்.

ஈஸ்வரன் சித்,அசித்துக்களைத் தனது உடலாகக் கொண்டு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலிய வ்யவகாரங்களுக்குக் காரணபூதனகிறன்.

இராமானுஜ சித்தாந்தத்தின்படி பரமாத்மாவானவன் சகுணப் ப்ரம்மம் சமஸ்த குணங்களோடு கூடினவன். அவனுடைய சங்கல்பமின்றி ஓர் அணுவும் அசையாது, நாம் அவனுடைய கருவிகள் என்ற மேலான எண்ணம் மேல் நோக்கி வரும்போது தான் என்னும் அகங்காரமும், மமகாரங்களும் கழிந்து, பக்தியினாலும், பகவானை சரணாகதி செய்வதாலும், வாழ்க்கையையே பகவத் கைங்கர்யமாக பாவித்து நடப்பதாலும், எல்லா காரியங்களையும் பகவதர்ப்பணச் செய்வதாலும், புலனடக்கம் ஏற்பட்டு, முக்தி நிலையை அடையத் தகுந்தவனாகிறான் என்கிறது விசிஷ்டாத்வைதம்.

உலகிலுள்ள மனிதனையோ அல்லது வேறு எந்தப் பிராணிகளையோ எடுத்துக் கொண்டாலும், அதன் சரீரம், பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலுண்டான ஒரு தத்வத்தையும் அவ்வுடலுக்குள் தேகத்திலிருந்து வேறுபட்ட ஜீவாத்மாவென்னும் மற்றொரு தத்வத்தையும் காணலாம். அந்த ஜீவாத்மா உடலுக்கு ஆத்மாவாய் இருந்து கொண்டு இச்சரீரத்தை கீழே விழுந்து நசித்து விடாமல் தாங்கிக் கொண்டும் தரித்துக் கொண்டும் இருக்கிறது. ஜீவன் சரீரத்தை விட்டு வெளியேறினால் மரணம் ஏற்பட்டு சரீரமும் செயலிழந்து கீழே விழுந்து சில காலத்திற்குள் அழிந்து விடுகிறது. ஜீவாத்மா அழிவில்லாதது; உடல் அழியக் கூடியது. ஒரு ஜீவன் மரிக்கிறது என்றால் அவன் உடல் அழிகிறது என்பது பொருள். ஜீவன் கர்ம பலன்களுக்கு ஏற்ப மனிதனாகவோ, விலங்காகவோ, வேறு ஏதாவது ஒரு பொருளாகவோ உலகத்தில் மறுபடியும் பிறவி எடுக்கிறது. இக்கருத்தையே பகவத் கீதையில் பரமாத்மா கண்ணபிரானும் 'வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய நவானி, க்ருஷ்ணதி நரோபராணி' என்று சொல்லியுள்ளான். கிழிந்து நைந்து போன வஸ்த்ரங்களைத் தூக்கி எறிந்து விட்டு, புதியவஸ்த்ரங்களைத் தரித்துக் கொள்வது போல் ஜீவனும், மரித்த உடலை விட்டுவிட்டு வேறு புதிய உடலைப் பெறுகிறது என்பதுதான் மேற்சொன்ன ஸ்லோகத்தின் பொருள்.

நாம் ஒருவனைப் பற்றிப் பேசும் போது, அவனுடைய சரீரத்தையோ, அதிலுள்ள ஜீவாத்மாவையோ தனித்துப் பேசுவதில்லை. சரீரத்துடன் கூடிய ஜீவாத்மாவை, ஒரே தத்வமாகத்தான் பேசுகிறோம். இதே விதமாக ஈஸ்வரன் சித் அசித் ஆகிய இரண்டு தத்வங்களையும் தனது உடலாகக் கொண்டு, அவற்றின் ஆத்மாவாய், அவைகளைத் தாங்கிக் கொண்டும், தரித்துக் கொண்டும், நியமித்துக் கொண்டும் விளங்குகிறான். எவ்விதம் உடலோடு கூடிய ஜீவனை, ஒரே தத்வமாக மதிக்கிறோமோ, அவ்விதமே சித், அசித்துக்களை உடலாகக் கொண்ட ஈஸ்வரனையும், ஒரே தத்வமாக எடுத்துக் கொள்வதால் நமது சித்தாந்தமும் அத்வைத சித்தாந்தமாகிறது. மூன்று தனித்தத்வங்களையும் மேற் சொன்னபடி ஒன்றாக்கியதே விசிஷ்டாத்வைதமாகிறது.

விசிஷ்டாத்தைவத சித்தாந்த மார்க்கத்தை ப்ரபத்தியோடு (சரணாகதியோடு) சேர்ந்த பத்தி மார்க்கம் என்று சிறப்பித்துக் கூறுவதுண்டு. சங்கரர் உயர்குலம் ஒன்று உண்டு என்ற கொள்கையைக் கொண்டவர். இராமானுஜரோ உயர் குலத்தையும், பரமாத்மாவையும் பக்தி, ப்ரபத்தி என்னும் அன்புப் பாசத்தால் இணைத்து நிலைநிறுத்தினார். பக்தனுடைய நிலைக்கும் மேலான நிலை அத்வைத ஞானியின் நிலை என்பது சங்கரரின் கொள்கை ஆகும். ஆனால் இராமானுஜரோ ஞானியின் கல்வி, கேள்விகள் நிறைந்த உள்ளத்தைக் காட்டிலும், பக்தனின் கள்ளம், கபடமில்லாத, குழந்தையுள்ளமும், வறியவரிடத்தில் தயையும் கருணையும், பகவானிடத்தில் பக்தியும் சரணாகதியும், அதே சமயம் குற்றங்களை மன்னிக்கும் ஸ்வபாவமுமே பகவானுக்கு மிகவும் உகப்பானது என்கிறார்.

உபநிஷதங்களில் ப்ரம்மம் அந்தர்யாமிப் பொருளாக எங்கும் நிறைந்து, பரந்துள்ளது என்ற வாக்யங்களைக் காணலாம். உபநிஷதங்கள், உலகம் யாவும் பகவானின் சரீரம் என்கின்றன.

" யஸ்ய ஆத்மா சரீரம், யஸ்யப்ருத்வீ சரீரம்ய
ஆத்ம நிதிஷ்டன் ஆத்மா மநந்த ரோய மயதி நம

இந்த ஜீவனையும், ப்ருகிருதியான உடலையும், இப்பிரபஞ்சத்தையும், சரீரமாகக் கொண்டு, அவற்றின் ஆத்மாவாய் அந்தர்யாமியாய் இந்த ப்ரம்மம் விளங்குகிறது என்பதாகும். இப்பிரபஞ்சம் முழுவதற்கும் ப்ரம்மம் ஜகத்காரண பூதனாகிறான். இக்கருத்தையே நம்மாழ்வாரும் திருவாய் மொழியில்,

" காண்கின்ற நிலமெல்லாம்.........
...............செய்கின்றனவே' '

என்று அருளியுள்ளார்.

இந்த பரமாத்மா சுக துக்கங்களுக்கு உட்படாததாயும், ஜீவாத்மாக்களைவிட முற்றிலும் வேறுபட்டவனாகவும், சர்வஞ்ஞனாய், சர்வசக்தனாய், வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவனாய், சௌலப்ய சௌசீல்யாதி, அனந்த கல்யாண குணங்களோடு கூடியவன் என்கிறது.

தத்வமஸி, அகம் ப்ரம்மாஸ்மி வாக்யங்களுக்கு நம் சித்தாந்தார்த்தம் :

பல புஷ்பங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட தேன், எந்த எந்த புஷ்பங்களிலிருந்து சேகரிக்கப்பட்டது என்று தெரியாமல், ஒரே தேன் என்ற பெயராக ஐக்யமாய் விடுவதுபோல், பல நதிகளில் ஓடி வந்த ஜலம், கடலில்

(44-ம் பக்கம் பார்க்க)

# ஈஸ்வர தத்துவம்

சர்வேஸ்வரன்-ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீயப்பதியாய், ஸர்வ லோக ரக்ஷகனுய் அகில ஹேய ப்ரத்யநீகனுய், ஸமஸ்த கல்யாண குணநிதியாய், ஸமஸ்த திவ்ய மங்கள விக்ரஹனுய், "அகலகில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கையுறை மார்பா" என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி, என்றும் பிரியாத பெரிய பிராட்டியுடன் கூடியவனுய், திருமாமகள் கேள்வன் என்றும், ஸ்ரீவத்ஸாங்கன் என்றும், பரவாஸுதேவனென்றும், மஹாவிஷ்ணுவென்றும் கூறப்படுபவனும், திரிபாத விபூதியென்றும், பரமபதமென்றும் கூறப்பட்டு வைகுந்த மாநகரில் நித்திய வாசம் செய்பவனுமான ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவம். ஆகவே, நமக்கு ஈஸ்வர தத்துவமென்பது நாராயணனும், அவனைவிட்டு என்றும் பிரியாத திருமாமகளென்றும், மஹாலக்ஷ்மியென்றும் பேசப்படும் பெரிய பிராட்டியுமான மிதுனமே — திவ்ய தம்பதிகளே. பூப்பிராட்டியும், நீளாதேவியும், பெரிய பிராட்டியின் அம்ஸபூதைகளானபடியால், அவர்கள் பெரிய பிராட்டியிடம் ஒடுக்கம். எனவே, அவர்களைத் தனித் தத்துவங்களாய் எடுப்பதில்லை. த்வைத ஸித்தாந்திகளாகிய மத்வர்கள், லக்ஷ்மி பிராட்டியைவிட்டு, நாராயணனை மட்டும் ஈஸ்வர தத்துவமாக ஏற்பதால், அவர்கள் ஏகாயனர் எனப் பேசப்படுகின்றனர். நமது ஸித்தாந்தப்படி, இருவரும் சேர்ந்தே ஈஸ்வர தத்துவம். அழகிலோ, கல்யாண குணங்களிலோ, பிரபுத்வத்திலோ சமமாயினும், பெருமானிடத்தில், ஆளுகைக்கு வேண்டிய ஞானம், பலம், வீர்யம், ஐஸ்வர்யம், ஸக்தி, தேஜஸ் ஆகிய குணங்கள் ஓங்கி நிற்கும். பிராட்டியிடத்திலோ, தாய்மைக் குரித்தான காருண்யம், வாத்ஸல்யம் முதலான குணங்கள் பிரகாசித்து நிற்கும்.

அவனுடைய ஸத்யம், ஞானம், அனந்தம், ஆனந்தம், அமலம் என்னும் ஐந்து குணங்களும் அவனுடைய தன்மை அல்லது ஸ்வரூபத்தை விளக்கக் கூடியவைகளாதலால், இவற்றை ஸ்வரூப நிரூபித தர்மங்களென்றும் சொல்கிருர்கள். அவனது குணங்களைச் சற்று விளக்குவோம்:

1. ஸத்யம் – நித்தியமாய், மாறுபடாத தன்மையுள்ளவன். ரூபத்தில் மாறுதல் உள்ளதை ஸ்வரூப மாறுதலென்றும், குணத்தில் மாறுபடுவதை ஸ்வாபாவத மாறுதலென்றும் கூறுவர்.

2. ஞானம் – ஸ்வயம் பிரகாசமாயிருக்கை. ஸகலமானவற்றையும் அறியும் தன்மை.

3. அனந்தம்–காலத்தாலோ, இடத்தாலோ, வஸ்துவாலோ அளவில்லாமல், எப்பொழுதும், எல்லாவிடத்திலும், எல்லா வஸ்துவிலும் வியாபித்திருக்கை. ஆதியும், அந்தமுமில்லாதவன், நித்யன்—அழிவில்லாதவன்.

4. ஆனந்தம் – ஸுகஸ்வரூபமாயிருக்கை. ஸர்வாங்க சுந்தரனுய், 'தோள் கண்டார் தோளே கண்டார், தாள் கண்டார் தாளே கண்டா'ரென்று கம்பர் கூறியபடி, 'நீண்டுமிளிர்ந்து, செவ்வரியோடி நீண்ட அப்பெரிய வாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே' என்று ஆழ்வார் பாரித்தபடியும், 'நீலமேனி ஐயோ என் நெஞ்சை நிறைகொண்டதே' என்று பேசியபடியும், மண்டோதரி இராமனைக் கண்டதும், 'புண்டரீகதளாய தாக்ஷன்' என்று கூறியபடியும், சுகுமாரனுனபடியால், ஆனந்தஸ்வரூபனுயிருக்கை. ஆனந்தத்தில், பிரும்மானந்தத்திற்கும் மேம்பட்டது வேறில்லை. மனிதர்கள் அடையக்கூடிய ஆனந்தத்தை விட, பல கோடி மடங்கு உயர்ந்ததென ஸ்ருதிகள் பேசுகின்றன. தைத்ரீய உபநிஷத் ஆனந்தவல்லி, 'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸாஸஹ ஆனந்தம் பிரம்மணோ வித்வாந் | ந பிப்பேதி ருதச்சனு'—எந்த பிரும்மத்திலிருந்து வாக்குகள், மனதோடுகூட அடைய முடியாமல் திரும்புகின்றனவோ அந்த பிருமத்தின் ஆனந்தத்தை அறிந்தபின், எந்தப் பொருளிடமும் பயப்படமாட்டான்.

5. அமலம் – எவ்வித தோஷமுமில்லாதிருத்தல். எவ்விதம் சூரியனிடத்தில் இருள் அண்டாதோ அதே விதம் பகவானிடத்தில் எவ்வித தோஷமும் சேராது.

---

**திரு. கே. வி. ஸ்ரீநிவாசன்,**
நங்கநல்லூர்.

---

ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகியவற்றுக்கான ஆறு குணங்கள் அவனுக்குண்டு. ஞானம், பலம், வீர்யம், சக்தி, ஐஸ்வர்யம், தேஜஸ் என்பவை அவை.

1. ஞானம்: சேதனனுக்குக் கொடுக்க வேண்டிய இஷ்டங்களையோ தடுக்க வேண்டிய அநிஷ்டங்களையோ அறிய தேவையான எல்லாவற்றையும் எக்காலத்திலும் ஏக காலத்தில் அறியும் வல்லமை.

2. பலம்: அகிலத்தையும் வகிக்கும் திறமை. எல்லாவற்றையும் தாங்கும் சக்தி.

3. வீர்யம்: எவ்வளவு காரியங்கள் செய்தாலும், களைப்படையாமலும் என்றும் நீங்காத ஊக்கத்துடனுன் இருத்தல். சகல உலகங்களைப் படைத்தும், காத்தும் எல்லாவற்றையும்

## சிவலிங்கம்

திருக்கோவில்களில், கருவறையில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் லிங்கம், சிவலிங்கம், பார்த்த லிங்கம் என்று பொதுப் பெயரில் அழைக்கப்பட்டாலும் அது ஐந்து வகைப்படும். அவையாவன :

1. சுயம்புலிங்கம் : பிறர் எவரும் ஸ்தாபிக்காது தாமாக உருவாகியது.

2. காணலிங்கம் : விநாயகர், சுப்பிரமணியர் போன்ற தெய்வ கணங்களால் ஸ்தாபிக்கப்பட்டது.

3. தைவிகலிங்கம் : பிரும்மா, விஷ்ணு முதலிய தேவர்களால் ஸ்தாபித்தது.

4. ஆரிட லிங்கம் : தவநெறியில் நிற்போரான ரிஷிகள், மகான்கள் போன்றோர் ஸ்தாபித்தது.

5. மானுட லிங்கம் : மனிதர்கள் இறை அருளால் முயற்சித்து ஸ்தாபித்தது.

தொகுத்தவர் : திருமதி. கமலா மாரியப்பன் — கோவை.

ஆதாரம்: திருநாவுக்கரசு நாயனர் புராணம்.

ஏவிக் கொண்டும் இருந்து சற்றும் சோர்வடையாதிருத்தல்.

4. சக்தி: பிறர் செய்ய முடியாததையும் செய்யக் கூடிய வன்மை, சேர்த்துக் கொள்ளத் தகாத ஹேய குணமுள்ள சேதனனையும் திருத்தி ஏற்றுக்கொள்ளும் தன்மை.

5. ஐஸ்வர்யம்: பிறரை ஏவி அடக்கியாளும் தன்மையும், லீலா விபூதி, நித்திய விபூதி ஆகிய லோகங்களை உடைத்ததாய் அவைகளை ஆளுகையும்.

6. தேஜஸ்: பிறரை ஜயிக்கும் சக்தியும், பிறரால் ஜயிக்க முடியாதிருத்தலும். மிகுந்த பிரகாசமுடைமை.

இந்த ஆறு உயர்ந்த குணங்களும் உள்ளவன் என்பதால், ஆறுகுணத்தானென்று தென்மொழியிலும், ஷாட்குண்ய பரிபூர்ணன் என வடமொழியிலும் பேசப்படுகின்றன.

இந்த ஈஸ்வரனுக்கு மூர்தமென்றும், அமூர்த்தமென்றும் இரு நிலைகளுண்டு. அமூர்த்தமென்பது, நாமரூபமற்று எங்கும் பரவி, ஸமஸ்த சேதனு சேதனங்களின் உள்ளும், புறமும் வியாபித்திருக்கும் நிலை. இந்நிலையில் இருக்கும்போது, பிரும்மம் எனும் பெயரால் குறிப்பிடப்படுகிறுன். ஆதலால், பிரும்மம் எனும் பதத்திற்கு அகில சேதனு சேதனங்களுடன் நாமவிபாகமற்று, ஒன்றுபட்டுள்ள ஈஸ்வரனென்று பொருள் கொள்ளலாம். பிரளய காலத்தில், சகல சேதனு சேதனங்களும் மிகுந்த சூக்ஷ்ம நிலையை அடைந்து, அவ்யக்தமாய், அந்த ஈஸ்வரனுடன் ஒன்றி நிற்கும். உலகில் காணப்படும் சகலமும், அந்த ஈஸ்வரனின் உடலெனவும், உலகில் சாதாரணமாக ஜீவனை அவன் எடுத்துள்ள உடலைக் கொண்டே பேசப்படுவதுபோல், ஈஸ்வரன் எல்லா சேதன அசேதனங்களுக்குள்ளும் அவற்றின் ஆத்மாவாயிருந்தும், அவற்றைத் தாங்கிக் கொண்டும், ஏவிக்கொண்டும் இருப்பதால், உலகில் காணப்படும் சகலமும் பிரும்மம் என்றே பேசப்படுகிறது. பல உபநிஷத், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளும் இதையே பேசுகின்றன.

முண்டகோபநிஷத் முதல் முண்டகத்தில், ஒரு பாகத்தின் பொருள் யாதென்று அறியப்படாததோ, கிரஹிக்கப்படாததோ, குலமோ, ஜாதியோ, கர்மேந்திரிய ஞானேந்த்ரியங்களோ இல்லாததோ, கால, தேச, வஸ்து பரிச்சேதமோ இல்லாததோ, மிகசூக்ஷ்மமானதோ அது தான் அக்ஷரப் பிரும்மம். அதனுல், எல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. சிலந்திப் பூச்சி எப்படி நூலை சிருஷ்டிக்கிறதோ, மனிதனிடத்தில் எப்படித் தலை, உடல் முதலியவற்றில் முளைக்கின்றனவோ அப்படியே அக்ஷரப் பிரும்மத்தினிடமிருந்து ஸமஸ்தமுமுண்டாகிறது. அந்த பிரும்மம் தனது சங்கல்பத்தால், ஸ்தூலாவஸ்தையை அடைந்து, அதிலிருந்து ப்ரக்ருதியும், பிராணனும், மனசும், ஜீவாத்மாக்களும், லோகங்களும், மோக்ஷ உபாயமும் பிறக்கின்றன. எந்த அக்ஷர பிரும்மம் எல்லாவற்றையும் அறியும் ஞானமயமோ அதிலிருந்து நாம ரூபாத்மகமாகிய பிரபஞ்சமுண்டாகிறது. சாந்தோக்யோபநிஷத் கூறுகிறது:

அநேகாவஸ்தைகளுடன் காணும் இவ்வுலகம், சிருஷ்டிக்கு முன், அவஸ்தாசூன்யமாய், சப்த வாச்ய ரூபமாய் இருந்தது. அந்த சப்த வாச்யம் (பிரணவம்) 'நான் பஹுவாகக் கடவேன்' என்று நினைத்தது. பரமாத்மா சங்கல்பித்து இப்பிரபஞ்ஜம் சிருஷ்டித்தது.

வண்டுகள் பலவிதப் பூக்களிலிருந்து மதுவைக் கொணர்ந்து சேகரிக்கின்றன. அந்த மதுதான் இந்த மரத்தின் பூவின் ரசமென்றுணர்வதில்லை. அதேவிதம் ஜீவாத்மாக்கள், சுஷிப்தி காலத்தில் பரமாத்மாவோடு சேர்ந்திருந்து, சுஷுப்தி கலைந்து, ஜாக்ரதாவஸ்தை ஏற்பட்டதும், தாம் பரமாத்மாவுடன் கலந்ததையே அறியாமல், இன்னுர் எனச் சொல்கிறுர்கள்.

சுஷுப்தி என்றால் ஆழ்ந்த தூக்கம். அந்த பரமாத்மா, அணுஸ்வரூபமான படியால், ஜீவன் அவனுக்குச் சரீர பூதன். உப்பை ஜலத்தில் போட்டால் அது கரைந்து அந்த ஜலத்தில் உப்பு, இருந்தாலும் அது புலப்படுவ தில்லை. உப்பு ஜலத்தில் கரைந்திருப் பது ருசியால் தெரிகிறது. அதே விதம் பரமாத்மா நம்முள் கலந் திருப்பது நமக்குத் தெரிவதில்லை.

பரமாத்மா, நாம ரூபமற்ற ஒவ் வொன்றினுள்ளும் வியாபித்திருப் பதைப் பல உபநிஷத்துக்கள் கூறு கின்றன. காணப்படும் ஒவ்வொன் றும் பிரும்மம்.

"நீராய் நிலனாய்த் தீயாக்
காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்களிரண்டாய்ச்
சிவனாய் அயனானாய்"

(நம்மாழ்வார் திருவாய்மொழி 6-91)

"காண்கின்ற நிலமெல்லாம் யானே என்னும்
காண்கின்ற விசும்பெல்லாம் யானே என்னும்
காண்கின்ற வெந்தியெல்லாம் யானே என்னும்
காண்கின்ற இக்காற்றெல்லாம் யானே என்னும்
காண்கின்ற கடலெல்லாம் யானே என்னும்
காண்கின்ற கடல் வண்ணனேறைக் கொலோ?
காண்கின்ற உலகத்தீர்க்கென் சொல்லு கேன்
காண்கின்ற வெண்காரிகை செய் கின்றவே"

(திருவாய்மொழி 5-6-3)

"உரைக்கின்ற முக்கட்பிரான் யானே என்னும்
உரைக்கின்ற திசைமுகன் யானே என்னும்
உரைக்கின்ற அமரரும்யானே என்னும்
உரைக்கின்ற அமரர்கோன் யானே என்னும்
உரைக்கின்ற முனிவரும் யானே என்னும்
உரைக்கின்ற முகில்வண்ணனேறக் கொல்லோ?
உரைக்கின்ற வுலகத் தீர்க்கென் சொல்லேன்
உரைக்கின்ற என்கோமளவொண் கொடிக்கே."

(திருவாய்மொழி 5-6-8)

"பூநிலாய ஐந்துமாய்ப் புனற் கண்நின்ற நான்குமாய்,
தீநிலாய மூன்று மாய்ச் சிறந்த காலிரண்டுமாய்,
மீநிலாய தொன்றுமாகி, வேறுவேறு தன்மையாய்
நீநிலாய வண்ணநின்னை யார் நினைக்க வல்லரே."

(திருமழிசை: திருச்சந்த விருத்தம் 1 முதல் 11 வரை)

"நீயே உலகெலாம் நின்வருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும்—நீயே
எரிசுடரும் மால்வரையும் எண்டிசையும், அண்டத்
திரு சுடருமாய இவை."

"தேவராய் நிற்கும் தேவும் அத் தேவரில்'
மூவராய் நிற்கும் முதுபுணரப்பும்— யாவராய்
நிற்கின்றதெல்லாம் நெடுமாலென் றோதார்,
கற்கின்ற தெல்லாம் கடை.

(திருமழிசை-நான்முகன் திரு ந்தாதி 20-54)

எல்லாவற்றையும் வியாபித்தும், அந்தர்யாமியாய் இருந்தும் வரு வதற்கு அமூர்த்த நிலை என்று பெயர். இவ்வித நாமரூபமற்ற பகவானை, எல்லாவற்றிலும் இருப்பதாக உணர்ந்து தியானிப்பதே நிர்க்குணோ பாசனை. இவ்வுபாசனை மிகவும் கடின மானது.

மூர்த்தம்: பகவான், ஜீவகோடி கள் தன்னைச் சுலபமாகத் தியா னித்து வந்தடைந்து ஆனந்தானு பவம் பெற, பரமபதத்திலே, திவ்விய மங்கள விக்கிரஹனாய், ஸ்ரீ, பூ, நீளா தேவிகளுடன் நித்தியவாசம் செய்து, கருட, விஷ்வக்சேனாதிகளுடனும், நித் திய சூரிகளுடனும், முக்தாத்மாக் களுடனும் சேவை சாதிக்கிறான். அவனையோ அவனது அனுக்கிரகத் தால் விசேஷ சக்திகளைப் பெற்ற தேவதைகளையோ உபாசிப்பதே ஸகுணோபாசனையாகும். எந்தத் தெய்வத்தைத் தொழுதாலும் அவற் றின் ஆத்மாவாய் நின்று பலனளிப் பவன் ஸ்ரீமந்நாராயணனே.

"அவரவர் தமதம தறிதறி வகைவகை
அவரவர் இறைவர் எனவடி யடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவில நிறையவர்
அவரவர் விதிவழி யடையநின்றனரே"

என்கிறார் நம்மாழ்வார்.

இந்தப் பகவானுக்குப் பரம், வியூ கம், விபவம், அந்தர்யாமி அல்லது ஹார்த்தன், அர்ச்சை என்றும் ஐந்து வித நிலைகளுண்டு.

1. பரம்: இது பரமபதத்தில் திவ் விய மஹிஷிகளுடனும், நித்திய முத் தாத்மாக்களுடனும் கூடி எழுந் தருளியிருக்கும் நிலை. இங்கு பக வானுக்கோ, இதரர்களுக்கோபசியோ, தாகமோ, நித்திரையோ சோகமோ, சோர்வோ இல்லை. இங்கிருக்கும் நித்தியமுக்த சேதனர்கள், சாம கானத்தாலும் இதர வகைகளாலும், ஆனந்தானுபவம் செய்து கொண்டே யிருப்பர்.

2. வியூகம்: க்ஷீராப்தியில் பகவான் சேதனர்களது ரக்ஷணார்த்தமாக வியூஹ வாசுதேவன் என்ற பெய ருடன் யோக நித்திரையில் இருக்கின்றான். சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்னும் மூன்று வகை உருவாகயிருக்கிறான். அந்த வியூஹ வாசுதேவனுடன் வியூ ஹம் நான்கு. சேதனர்களின் அபயக் குரல் கேட்டு, அபயமளிப்பது இங் கிருந்துதான். ஆகவே, க்ஷீராப்தி யைக் கூப்பாடு கேட்கும் லோக

மென்று சொல்லுவார்கள். இந்த நான்கு மூர்த்தங்களும் பரவாசுதேவனுடைய அம்சங்களே. பிரளய காலத்தில், வாசுதேவனிடம் ஒடுங்கியிருக்கும். இந்த வாசுதேவனிடம் ஞானம், பலம் முதலிய ஆறு குணங்கள் வியாபித்திருக்கும். இந்த வாசுதேவனே ஸர்வாந்தர்யாமியாய், எல்லோருக்கும் ஞானத்தை அளித்து, கண் முதலிய இந்திரியங்களுக்கு எட்டாதவனென்று கூறப்படுகிறது. சங்கர்ஷணன் ஞானம், பலம் இரு குணங்களுடன், சம்ஹாரத்தைச் செய்கிறான். இவனுக்குப் பிராஞ்ஞன் எனவும் பெயர். இவன் சுஷிப்திக்கு அதிஷ்டான தேவதை. சாஸ்திரங்களுக்கும் இவனே தேவதை.

பிரத்யும்னன்: ஐஸ்வர்யம், வீர்யம் ஆகிய இரு குணங்களுடன், ஸ்வப்பனத்திற்கு அதிகாரியாகி, மனத்தால் அறியும் தன்மையுள்ளவனாய், அயலார் அறியாமல், தான் மட்டும் அனுபவிக்கும் தன்மையுள்ளவனாய் சிருஷ்டியைச் செய்கிறான்.

அநிருத்தன்: சக்தி, தேஜஸ் என்ற குணங்களுடன், வைச்வாநான் என்னும் பெயருடன் ஸ்திதி அல்லது ரக்ஷணத்திற்கு அதிபதியாகிறான். இவன் ஜீவர்கள் ஜாக்ரதாவஸ்தையின் அதாவது விழித்துக் கொண்டிருக்கும்போது அவர்களுக்கு அதிஷ்டாதா. பிரத்யும்னன் சுத்தவர்க்க சிருஷ்டிக்கும், அநிருத்தன் காலச் சிருஷ்டிக்கும், மிச்ரசிருஷ்டிக்கும் அதிஷ்டாதா. சில சமயம், பரப்பிரும்மமே ரஜோ குணத்துடன், சதுர்முக பிரும்மாவாய் சிருஷ்டியையும், தமோ குணத்துடன் ருத்ரனாய் சம்ஹாரத்தையும், சத்வ குணத்துடன் மஹாவிஷ்ணுவாய் ரக்ஷணார்த்தத்தையும் செய்கிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

நான்முகன் திருவந்தாதியில் திருமழிசையாழ்வார்,

'நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்,' என்கிறார். நாராயணனின் உந்திக் கமலத்திலிருந்தே பிரும்மா தோன்றியதாகவும், அவருக்கு வேதத்தைப் பகவானே ஓதுவித்துச் சிருஷ்டிக்கு சக்தியையும் அருளியதாகவும், பிரும்மாவும் ஜீவவர்க்கத்தைச் சேர்ந்தவர் தான் என்றும் பெரியோர்கள் கூறுவர். சிருஷ்டியை, சமஷ்டி - சிருஷ்டி, வியஷ்டி-சிருஷ்டி என்று இரு பிரிவுகளாக்கி, சமஷ்டி சிருஷ்டியை ஈஸ்வரன் செய்கிறானென்றும், வியஷ்டி சிருஷ்டியை பிரும்மா செய்கிறானென்றும், நாராயணன் பிரும்மா, சிவனுக்குள்ளும், அந்தர்யாமியாயிருந்து, சிருஷ்டி சம்ஹாரங்களைச் செய்கிறானென்றும் கூறுகின்றனர். சமஷ்டி சிருஷ்டி யென்பது, ப்ருக்ருதியிலிருந்து பஞ்ச பூதங்கள் வரையிலுள்ளது. (மஹத் அஹங்காரம், மனஸ், கர்ம ஜ்ஞாநேந்திரியங்கள், தன் மாத்திரைகள், பஞ்ச பூதங்கள்). வியஷ்டி சிருஷ்டி யென்பது, இந்த சமஷ்டி சிருஷ்டியில், உண்டான பொருள்களை மூன்றாகக் கலந்து, சிருஷ்டித்து அவற்றுடன் ஜீவனைச் சேர்த்தல்.

3. விபவம்: இராமகிருஷ்ணவதாரங்கள். அவதாரங்களில், சிலவற்றை பூர்ணவதாரமென்றும், சிலவற்றை ஆவேசாவதாரமென்றும் சொல்வார்கள். ஆவேசாவதாரமாவது, பகவான் ஏதாவது ஒரு காரியத்திற்காக யாராவதொருவரிடம் புகுந்து, அவருக்கு விசேஷ சக்தியைக் கொடுத்து, அக்காரியம் முடிந்ததும், அவரிடமிருந்து விலகல். நம் ஆசார்யர்கள், இராமகிருஷ்ண, பரமஹம்ஸர் போன்ற பெரியோர்கள் பகவானின் அம்ஸாவதாரங்களே.

4. அந்தர்யாமி: இதற்கு ஹார்த்தன் என்றும் பெயர். ஒவ்வொரு ஜீவாத்மாவின் ஹிருதய கமலத்திலிருந்து அவனைத் தரிப்பிக்கச் செய்பவன், யாரிடமும் துவேஷ புத்தியில்லாது எல்லோரிடமும் பகவானிருக்கிறானென்று அன்பாய் நடப்பதே மோக்ஷமாகும்.

5. அர்ச்சை: நம்மால் பரத்தையோ, வியூஹத்தையோ, விபவத்தையோ, அந்தர்யாமித்வத்தையோ கண்ணால் காண முடியாது. விபவமோ அவனிருந்து அவதரித்த காலத்தவர்களுக்கே பிரயோஜனமானது. ஆக, ஒரு சேதனன் தங்கத்தாலோ, வெள்ளியாலோ, பஞ்ச உலோகத்தாலோ, கல்லினாலோ, ஓர் உருவத்தைச் செய்து, அதில் சாந்நித்யம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தால், அவ்விக்கிரஹத்துள் அல்லது படத்தில் வந்திருந்து, அவன் செய்யும் பூஜைகளை ஏற்று, அவனை உஜ்ஜீவிக்கின்றான். அர்ச்சையிலுள்ள எம்பிரானிடம், பிரதிஷ்டை காலத்தின் சக்தியும், மந்திர சக்திகளும், பின்னர் செய்யும் ஆராதனங்களும், பக்தர்கள் செய்யும் தோத்திரங்களும் விசேஷ சக்திகளை ஏற்படுத்துகின்றன. சில வருஷங்களுக்கு ஒரு முறை மஹா சம்ப்ரோக்ஷணமும் செய்யப்படுகின்றது. மோட்டாரில் பொருத்தப் பட்ட பேட்ரியில் சக்தி குறைந்தால், மறுபடியும் மின்சார சக்தியைப் பாய்ச்சி சரிவர இயங்கச் செய்வது போலத்தான் சம்ப்ரோக்ஷணமும்.

பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதியில் பாடுகிறார்:

**" தமருகந்த தெவ்வுருவம்**
**அவ்வுருவம் தானே:**
**தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்**
**தமருகந்து**
**எவ்வண்ணம் சிந்தித்**
**திமையோ திருப்பரே**
**அவ்வண்ணம் ஆழியானும்" 44**

இதன் அர்த்தம்: சக்கரபாணியாகிய எம்பிரான், பக்தர்கள் எந்த உருவத்தை இஷ்ட தேவதையாகத் தனக்களிக்கிறார்களோ அவர்கள் அளிக்கும் பெயர்களையும், லீலைகளையும் ஏற்று அநுக்கிரகம் செய்கின்றான்.

**(39-ம் பக்கம் பார்க்க)**

# மோனமென்பது ஞான வரம்பு

'மோனமென்பது ஞான வரம்பு' மௌனமென்பது ஞானத்தையடைய வழி என்பது பொருள். இவ்வெளிய வாக்கியத்தினை அருளியவர் ஔவையார். இன்று மோனம் அல்லது மௌனம் பற்றிப் பலர் பலவிதமாக கருத்துக்கள் கொண்டுள்ளனர். இவ்மோனமாகிய மௌனம் எவ்வளவு சிறந்த இனிய வாழ்க்கைக்கு முதன்மையாக இருக்கிறது என்பதை இக்கட்டுரையில் காண்போம்.

மௌனம் அல்லது மோனம் என்றால் சும்மாயிருப்பது. சாதாரணமாக ஒருவன் வாய் பேசாமல் இருந்தால் அவன் மௌனமாயிருக்கிறான் என்று கூறுவது உலக வழக்கம். சத்துவம், இராசசம், தாமசம் ஆகிய முக்குணங்களில் இது சத்துவ குணத்தைச் சார்ந்தது. ஆனால் பேசாமல் மட்டும் இருந்தால் 'ஞானம்' வந்து விடுமா? அப்படியிருந்தால் ஊமைகளெல்லாம் ஞானிகளாக வேண்டுமென்றோ! சந்நியாசிகள், துறவிகள் இவர்களில் சிலர் வாயால் பேசாமல் அவசியமாக வெளியிட வேண்டிய எண்ணங்களை எழுதிக் காட்டுவதுண்டு.

இத்தகையோர் ஒரு காரிய சித்திக்காகக் குறித்த காலம் வரையில் மௌன விரதத்தை அனுஷ்டிப்பார்கள். அதனால் அவர்களிடம் அதிகமாகப் பேசுதற்கு இடமில்லாமற் போகிறபடியால், அவர்களது மனம் நாட்டப்பட்ட நிலையினின்று சலிக்காமலிருக்க உதவுகிறது. ஆயினும் இவை பூரண மௌனமாகாது. கீழ்க் கண்ட மூன்றுவித மௌனங்களடங்கியதே பூரண மௌனம். அதுவே ஞானிகளுடையும் மௌனம்.

1. வாக்கு மௌனம்: வாய் திறந்து எதையும் பேசாதிருத்தல்.

2. காஷ்ட மௌனம்: அவையவங்களால் ஒரு வேலையும் செய்யாதிருத்தல்.

3. மனோ மௌனம்: மனத்தால் எதையும் சிந்திக்காதிருத்தல்.

ஒரு காரியம் நடக்கவேண்டுமாயின் மனம், இந்திரியம், புலன் மூன்றும் சேர்ந்தே நடக்க வேண்டும். இந்த மூன்றில் மனம் முதலில் ஒன்றை நினைக்க வேண்டும். பிறகு இந்திரியத்தின் உதவி கொண்டு புலன் வழியாய் வெளி விஷயங்களை உணர்ந்து கருமேந்திரியங்களால் செய்கிறது. மனம் நினைக்காவிட்டால் ஒரு காரியமும் நடவாது. ஆகையால் மனோ மௌனமே ஞானத்திற்கு முக்கிய சாதனமாக முதற்படியாகத் திகழ்கின்றது. மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களாலும் நம் கருமங்களைச் செய்கிறோம். மனதால் நினைப்பதாலும், வாக்கால் வசனிப்பதாலும், காயத்தால் ஒன்றைச் செய்வதாலும் பாவ புண்ணியங்களைச் செய்கிறோம். மனம் அடங்கிவிட்டால் கன்மமே ஒழிந்துவிடும். மனம் சலனமற்று இருக்கும்போது அமைதியாக (சத்துவகுண) இருக்கிறது. மனதின் உருவ நிலையே அதன் இரோஜ தாமத குணங்களாம். அருவ நிலையே சத்துவ குணம். மனோலயம் அடைந்த ஞானிகள் ஈசுவரார்ப்பணமாகக் கனவு காண்பது போல் காரியங்களைச் செய்தாலும் அவர்களுக்கு கர்மம் உண்டாகாது.

மனமொடுங்கினால் ஆன்மாவானது தன்னைத் தான் அறிய முற்படுகிறது. இதனையேதான் ஔவையார் மிக எளிமையானவார்த்தைகளில் மோனமென்பது ஞானவரம்பு' என அழகாகத் தெளிவாகக் கூறியுள்ளார்கள். இதனால், மௌனமென்பது ஞானத்தை அடைய வழி பிறக்கிறது என்பதைத் தெளிவாக உணர்த்துகிறார்.

### எது மவுனம்?

மனம் உள்ளும் வெளியும் ஆகிய இரண்டு வழிகளில் தொழில் செய்கிறது. வெளியில் இந்திரிய வாயிலாக புறம் போந்து விஷயங்களில் பிரவேஷிக்கிறது. உள்ளே மனோ ராஜ்யம் செய்கிறது. ஒவ்வொரு சமயம் வெளி விஷயங்களைக் கவனிப்பதைவிட்டு அதாவது மனதில் ஒன்றும் சிந்திக்காமல் சற்று நேரம் சும்மா இருக்கிறோம். அப்போது அருகிலுள்ளோர் பேசுவதும் நமக்குக் கேட்காது. எதிரில் ஒருவர் செல்வதும் நமக்குத் தெரியாது. ஏனெனில் மனம் எந்த இந்திரியத்தோடும் சம்பந்தப்பட்டாலும், எதையும் சிந்திக்காமலும் இருக்கிறது. அதுவே மௌனமாகிய நிலைமை.

ஒரு தடாகத்தில் நீர் கலங்கி அலைகள் வீசிக் கொண்டிருக்கையில் அத்தடாகத்தின் அடியில் என்ன இருக்கிறதென்று தெரியாது. அத்தகைய தடாகத்தைப் போன்றது சலனத்தோடுகூடிய மனம்; அதாவது சத்துவ குண மாத்திரமாக நின்ற மனம் அலையற்ற தடாகம் போன்றது. அப்போது அதன் அடியிலுள்ளது தோன்றும். மனதின் அடிப்பாகமே அது உதிக்குமிடம். இதை வைத்தே மெஸ்மரிசம், ஹிப்னடிசம் என்ற முறையில் நோயாளிகளை மயக்க நிலைக்கு கொணர்ந்து பல நோய் நீக்க முறைகளையும், பல உண்மைகளையும் இதில் கைத்தேர்ந்தவர்கள் செய்வதை அறிகிறோம். மனம் எங்கிருந்து உதிக்கின்றது என்ற

திரு. கா. சுகுமாரன்—திருவாரூர்.

நோக்க, ஆன்ம தரிசனம் உதயமாகும். ஏனெனில் ஆன்மாவில் இருந்தே மனம் உதிக்கின்றது. சிலர் மனதையும் ஆன்மாவையும் ஒன்று படுத்திக் கூறுவர். ஆன்மா வேறு, மனம் வேறு. எளிமையாகக் கூற வேண்டுமானுல் ஆன்மா எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருந்து என்றும் அழியாமல் இருக்கக் கூடியது. மனமோ நல்லதை செய்யவும் தீயதை செய்யவும் உதவியாக இருக்கும்.

தாயுமானவர் மனதை நோக்கி 'நின் சன்ம தேயத்தில் நீ செல்லல் வேண்டும்' என்ருர். 'அதாவது மனமே நீ எங்கிருந்து முளைத்தாயோ அங்குப் போய்ச் சேர்' என்ருர். இன்னும் அம் மகானே,

"சும்மாவிருக்கச் சுகமுய மாகுமே
யிம்மாயா மோகமினி யேடை-தம்
மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண்
டாங்கன்ம
நிட்டா சிறு பிள்ளாய் நீ"

என்றும்,

"சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று
சுருதியெல்லா
மம்மா நிரந்தரஞ் சொல்லவும் கேட்டு
மறிவின்றியே
பெம்மான் மௌனி மொழியையுந்
தப்பியென் பேதைமையால்
வெம்மாயைக் காட்டி லலைந்தே
னந்தோ வென் விதிவசமே"

என்றும்,

"சும்மா இருப்பது சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ
பராபரமே"

என்றும் அருளியுள்ளார். குமரக்கடவுள் திருவருள் பெற்றுத் திருப்புகழ் பாடியருளிய அருணகிரிநாதர் கந்தரநுபூதியில்,

"சும்மா விடு சொல் லறவென்றலுமே
யம்மா பொருளொன்று மறிந்
திலனே"

என்று அருளியதும் ஈண்டு சிந்திக்கற்பாலன.

சத்துவ, இராசச, தாமசம் ஆகிய முக்குணங்களும் சேர்ந்தே சுத்த மௌனம் எனப்படும்.

"சித்த மவுனஞ் செயல்வாக் கெலா
மவுனஞ்
சுத்தமவுன மென்பார் நோன்றிற்
பராபரமே"
*(தாயுமானவர்)*

என்னிடம் சித்த மவுனம் (உறுதியான மனம்) உதித்தால் என் சித்தம் செய்கை, வாக்கு யாவும் மௌன மாகும். அதாவது மனம், வாக்கு, காயம் மூன்றும் மௌனம். பின்பு மனம் தூய்மையாகிறது. மனம் தூய்மையடையும்போது வாக்கு, காயம் தூய்மையடைகிறது என்பது பொருள்.

இந்த மௌன நிலையை அடைதற்கு ஆசை ஒழிய வேண்டும். எல்லாரும் ஏக காலத்தில் இதனை அடைந்துவிட முடியாது. மனம் ஒரே சிந்தனையில் நிற்பதே கடினம். சதா ஒரு சிந்தனை விட்டு இன்னொரு சிந்தனையில் தாவி அலைந்து கொண்டு இருப்பதுதான் அதன் இயல்பான குணம். மனதை பற்றிக் குரங்கிற்கு ஒப்பிட்டுக் கூறுவர்.

ஆகையால் முதலாவது ஆசையை கொஞ்சம் கொஞ்சமாக அடக்க வேண்டும்; மனம் இச்சா சொரூபம். இச்சையை ஒழித்தால் மனமடங்கும்; அதோடு மனதை முதலில் குறித்த ஒருசிந்தனையிலேயே நிறுத்திப் பழக வேண்டும். அதற்கே சகுணோபாசனை வைக்கப்பட்டிருக்கிறது. உலக போகத்திலிருக்கும் விருப்பத்தை உபாசனு மூர்த்தியிடம் செலுத்தி (அதுவே பக்தி என்பது) மனதை அங்கு நிறுத்திப் பழக வேண்டும். அதில் திடப்பட்டு அநுபவம் முதிர முதிர மனவொடுக்கம் சித்திக்கும். இது மிகக் கடினமாயினும் சாத்தியமானதே. சும்மாயிருப்பதுவே கஷ்டம். இது சோம்பலல்ல. இதில்தான் மனம் பூர்ண சுறுசுறுப்புடன் வேலை செய்கிறது. மனதை அதன் விருப்பப் படி விட்டுவிட்டு அதன்பின் அலைவது கஷ்டமல்ல. ஒரு குதிரையை அதன் மனம் போனபடி முரட்டுத்தனமாய் மேடு பள்ளம் பாராது பாய்ந்தோடும் படி விட்டுவிடுவது கெட்டிக்காரத் தனமுமல்ல; கஷ்டமுமல்ல; அதன் கடிவாள வாரை இழுத்துப் பிடித்து அதை அடக்கி நிறுத்துவதே கடினம். அப்படிச் செய்பவனே சாமர்த்தியவான்; மனதை அடக்கி ஆளக் கற்றவனே உண்மையான வீரன். நம் முன்னோர்கள் இச் சக்தியாலே திரிகால ஞானிகளாக; வியக்கும்படியான காரியங்களைச் செய்தார்கள்.

மனதை அடக்குவதற்கு முன் நம் ஐம்புலன்களை அடக்க வேண்டுமென் பதை வள்ளுவர் பல அதிகாரங்களில் தம் எளிய குறட்பாக்களால் எடுத்துரைக்கின்ருர். வேறு பல நூல்களும் மனதை அடக்க வழிகளைக் கூறியுள்ளன. அவர்களது புராண வரலாறுகளையும், அருள்மொழிகளையும் இங்கு விரிப்பின் பெருகும். 'மனமது செம்மையானுல் மந்திரம் தேவையன்று'. எனவே நாம் அனைவரும் மனதை அடக்குவதற்குரிய எளிமையான வழிகளை கண்டு உணர்ந்து மனதை அடக்கி அறத்தை மேற்கொண்டு வாழ்க்கையில் உண்மையான, உறுதியான, இறுதியான மகிழ்ச்சியினைப் பெறுவோமாக.





# கல்லாலின் அடி அமர்ந்த தெய்வம்

சிவபெருமானது குருவடிவே தட்சிணாமூர்த்தி ஆவர். இவர் தென் திசையை நோக்கி வீற்றிருப்பதால் இவரைத் தென்முகக்கடவுள் எனவும் கூறுவர். கல்லால மரத்தின் அடியில் யோகாசனத்தில் சநகர், சநந்தனர், சநாதனர், சநற்குமாரர் என்னும் நான்கு முனிவர்களுக்கும் உபதேசிக்கும் முறையில் அமர்ந்திருக்கிறார். அவருடைய ஒரு திருவடி முயலகனை மிதித்துக் கொண்டும், மற்றொரு திருவடி வீராஸனத்திலும் காணப்படும். நான்கு திருக்கரங்களில் வலது முன் கரம் சின்முத்திரை தாங்கியும், வலது பின் கரம் உருத்திராட்ச மணி மாலை தாங்கியும் இருக்கின்றன. இடது திருக்கரங்களில் ஒன்று அமுத கலசத்தையும், மற்றொன்று வேதத்தையும் தாங்கியுள்ளன. யோக முறையைக்


*திரு. கே. நாராயண சுவாமி*

*மயிலாடுதுறை.*


காட்டுவதால் இவரை யோக தட்சிணாமூர்த்தி என்றும்; தும்புரு, நாரதர் முதலியோருக்கு வீணையின் இலக்கணத்தை உணர்த்தியதால் வீணா தட்சிணாமூர்த்தி என்றும் அழைப்பர்.

ஞானத்தைக் கையால் காட்டும் அடையாளம் சின் முத்திரையாகும். சுட்டு விரலால் பெருவிரலின் அடியைச் சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் வேறாக ஒதுக்கிக் காட்டப்படும் முத்திரையாகும் இது. பெரு விரல் இறைவனையும், சுட்டு விரல் ஆன்மாவையும் குறிக்கிறது. மற்ற மூன்று விரல்களில் நடுவிரல் ஆணவ மலத்தையும், அணிவிரல் கன்ம மலத்தையும், சுண்டு விரல் மாயா மலத்தையும் குறிக்கும். ஆணவாதி மலங்களை விட்டு ஆன்மா இறைவனை அடைந்து இன்புறுவதை இச்சின்முத்திரை காட்டுகிறது. இடக்கை அமுதம் மலநீக்கம் செய்து சிவானந்தத்தை நுகரச் செய்வதையும்; உருத்திராக்க மணி சிவஞானத்தில் நிலைத்து ஐந்தெழுத்து எண்ணுவதையும்; முயலகனை மிதித்தல் ஆணவ மலத்தை மிதித்தலையும்; வீராஸனம், "எங்கும் யாம் யாவர்க்கும் எளியோமல்லோம் யாவர்க்கும் மேலானோம்" என்னும் பெருமிதத்தையும்; கல்லாலின் நிழல் ரஜோ, தமோ குணங்கள் அண்டாது சத்துவ குணத்தைச் சார்ந்திருத்தலையும்; தென்முகம் அகோரமுகமான தால் பயத்தை அகற்றி அருளைக் கொடுப்பதையும் உணர்த்துகின்றன. இந்த மூர்த்தியை மௌனகுரு என அழைப்பர்.

பிர்ம்மா முதலிய தேவர்களுக்கு உபதேசிப்பவரான சிவனுடைய ரூபத்திற்கு தட்சிணாமூர்த்தி என்று பெயர். தெற்கு நோக்கியிருக்கும் இவர் எளிய முறையில் அரிய கருத்தை உபதேசிக்கும் திறமை உடையவர் ஆவார். தென்திசை அழிவையும், வடதிசை அழியாத அமிர்த வாழ்வையும் குறிக்கும். பக்தர்களைத் தம்மை நோக்கச்செய்து அமரத்தன்மையை அடையச் செய்யும் புனித வடிவம் இவருடையதாகும். இவர் ஆசார்யர்களுக்கெல்லாம் ஆசாரியராய், எவ்விதச் செயலுமற்ற மௌனத்தைக் கடைப்பிடித்து ஆனந்தத்தை அனுபூதியாகத் தம் உணர்வால் வெளிப்படுத்திச் சலனமற்ற நிலையில் எழுந்தருளியுள்ளார். தம்மிடம் வந்து சரணடைந்த சீடர்களின் உள்ளத்தில் அந்த ஆனந்தத்தை முழுவதும் மௌன வடிவிலேயே பரவச்செய்து பிரம்ம நிலையை உணர்த்தும் பரம்பொருளின் வடிவமாகத் திகழ்கிறார். கல்லால மரத்தின் (வட விருக்ஷம்) கீழிருந்து கொண்டு ஸ்வாத்மா ராமராய், கையில் தரித்த சின் முத்ரையுடன், இளைஞராய், ஆனந்த மான ரூபத்துடன் இருக்கும் இந்த மூர்த்தியே குருகளுக்கெல்லாம் குருவான குருமூர்த்தியென்று எல்லோராலும் உபாஸிக்கப்பட்டு வருவதாகும்.

பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடல் புராணத்தில், தட்சிணாமூர்த்தி கல்லால மரத்தடியில் அமர்ந்து நான்மறை, ஆறங்கம் முதலிய நூல்களில் வல்ல சனகாதி முனிவர்களுக்கு ஆல விருக்ஷத்தினடியில் குரு முகமாய், வீற்றிருந்து தாமே எல்லாப் பொருளுமாயும், அப்பொருளில் நீங்கிய தன்மையுமாயும் இருக்கின்ற நிலையைச் சொல்லாமல் மௌனநிலையிலே உணர்த்தியருளியவர் என்றும், அவரைத்தியானித்தால் பிறவிநோய் நீங்கும் என்றும் கூறியுள்ள கருத்தை,

"கல்லாலின் புடையமர்ந்துநான்மறை
ஆறங்கமுதல் கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும்வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்துகாட்டிச்
சொல்லாமல் சொன்னவரை
நினையாமல்
நினைந்து பவத்தொடக்கை
வெல்வாம்"

என்ற அரிய பாடலிலிருந்து அறியலாம். தட்சிணாமூர்த்தியை,

"ஏரிசையும் வடவாலின் கீழ்ருந்தங்கு
ஈரிருவர்க் கிரங்கிநின்று
நேரியனுன் மறைப்பொருளை உரைத்து
ஒளிசேர் நெறியளித்தான்"

எனத் திருஞானசம்பந்தரும்,

"நன்றாக நால்வருக்கு நான்மறையின்
உட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கு
அறமுரைத்தான்"

## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்
### ஸ்ரீ நிவாசா மங்காபுரம்

ஆர்ஜித ஸேவைகள் :

| | | |
|---|---|---|
| 1. | நித்ய அர்ச்சனை, ஒரு வருடத்திற்கு | ரூ. 42/- |
| 2. | நிரந்தர நித்ய அர்ச்சனை, (ஆயுள் முழுவதும்) | ரூ. 542/- |
| 3. | கல்யாணோத்சவம், (நாள் தோறும்) | ரூ. 200/- |
| 4. | அபிஷேகம்-(வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே) | ரூ. 100/- |

தளிகைகள் (நைவேத்தியங்கள்) :

| | | | |
|---|---|---|---|
| 1. தத்யோதனம் | ரூ. 75/- | 5. ஸீரா | ரூ. 300/- |
| 2. புளியோதரை | ரூ. 100/- | 6. தோசை(படி) | ரூ. 300/- |
| 3. பொங்கல் | ரூ. 110/- | 7. கேஸரி பாத் | ரூ. 180/- |
| 4. சர்க்கரைப் பொங்கல் | ரூ. 135/- | 8. ஸாகர பாத் | ரூ. 150/- |

மூன்று நாட்களுக்கு முன்பேயே மேற்படி ஸேவைகள் மற்றும் தளிகைகளுக்கான தொகையினைச் செலுத்துதல் வேண்டும்.

(திருப்பதி-சித்தூர் நெடுஞ்சாலையில் திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் உள்ளது).

என மாணிக்கவாசகரும் போற்றியுள்ளனர்.

ஸ்ரீபரமேஸ்வரன் அவதாரமாக விளங்கியவரும் ஜகத் குருவுமான நம்முடைய பரமாசாரியாள் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாள் ஸ்ரீதட்சிணா மூர்த்தி அஷ்டகம் என்னும் தோத்திரத்தை அருளியுள்ளார். இந்த தோத்திரங்கள் வேதாந்த தத்துவங்களைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறுவதாக அமைந்திருப்பதுடன் விசாரத்துக்கும் தியானத்துக்கும் சுலபமாய் அமைந்துள்ளன. நம்முடைய குருபரம்பரையில் பரமேசுவரனே ஆதி குருவாய் விளங்குகிறார். அவர் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற செயல்களுக்காக மூன்று விதமாக வடிவங்களை எடுத்து இச் செயல்களைச் செய்கிறார். மேலும் இவ்வுலகில் மாறிமாறி ஜனன மரணங்களை யனுபவித்து, இந்தப்பிறவியில் மனிதராய்ப் பிறந்து ஸம்ஸார பந்தத்தால் கட்டுண்டு அஞ்ஞான இருளில் மூழ்கித் தவிப்போருக்கு ஞானோதயம் உண்டாக்கும் பொருட்டு ஸர்வேஸ்வரன் ஞானத்தை அருளும் தட்சிணாமூர்த்தியாய் உலக குருவாய் அவதரித்து, மௌனியாய் சொல்லாமற் சொல்லி ஆத்ம ஞானத்தை உலகத்தவர்க்கு உபதேசிக்கிறார். ஆத்ம வித்தை சித்திப்பதற்குத் தட்சிணாமூர்த்தியினுடைய அருள் மிகவும் அவசியமாகும். பல உயரிய கருத்துக்கள் அடங்கிய இந்த தோத்திரங்களை அருளிய ஸ்ரீசங்கர பகவத் பாதாள் அவர்களுக்கு எவ்வளவு நன்றி கூறினாலும் போதாது. இந்த தோத்திரங்களைத் தினம் பாராயணம் செய்து ஸ்ரீதட்சிணாமூர்த்தியின் அருளைப் பெறுவோமாக. அத்வைத சம்பிரதாயத்தில் ஸ்ரீதட்சிணாமூர்த்தி ஆதி குருவாகப் போற்றி வணங்கப் படுவதுபோல, ஸ்ரீ ஹயக்ரீவர் வைணவ சம்பிரதாயத்தில் ஆதிகுருவாகப் போற்றி வணங்கப்படுகிறார்.

தட்சிணாமூர்த்தியின் இத்தகைய புனித ஞான வடிவத்தைத் தேவி தன் வடிவமாகக்கொண்டிருப்பதை "தக்ஷிணாமூர்த்தி ரூபிணி" என்ற திருநாமத்தால் வசின்யாதி வாக்தேவதைகள் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் போற்றியுள்ளனர். தேவியிடத்தில் சிவன் அடங்கியிருக்கும் வடிவத்திற்குக் காமாட்சி என்றும், சிவனிடத்தில் தேவி அடங்கிய வடிவத்திற்குத் தக்ஷிணாமூர்த்தி என்றும் பெயர். சக்தியை வெளிப்படுத்தாத வெளித் தோற்றத்தில் சலனமற்ற சிவவடிவம் என்றும், ஞானஸ்வரூபிணியான தேவி உள்நிரம்பியுள்ளதைக் காட்டும் சச்சிதானந்த வடிவம் தேவியின் தக்ஷிணாமூர்த்தி வடிவம் என்றும் அழைப்பர். தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் இருக்கும் தேவி ஸனகாதி முனிவர்களால் ஆராதிக்கப்பட்டவள். இவர்கள் தேவியின் பரமபக்தர்கள் என்ற விபரம் பிரம்மாண்ட புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. லலிதா த்ரிசதியில் "ஸநகாதி முனித்யேயாயை நம;" என்று தேவி போற்றப்படுவதை அறியலாம். இவர்கள் தக்ஷிணாமூர்த்தி வடிவில் எழுந்தருளிய தேவியிடம் உபதேசம் பெற்றவர்கள். தேவி வழிபாட்டிற்கான ஸமய மார்க்கத்தை விளக்கும் ஐந்து சுபாகமங்களை இந்நால்வருடன் வசிஷ்டரும் சேர்ந்து வெளியிட்டுள்ளதாகச் சொல்லப்பட்டுள்ளது. அம்பாள் இந்த ஸமய முறை வழிபாட்டினால் ஆராதிக்கத் தக்கவள். சின்மாத்ரமும், அமலமும், சாந்தமுமான சிவஸ்வரூபமானது சக்தியின் மூலமாகத்தான் அறியப்படக் கூடுமென்பதாக வாஸிஷ்ட ராமாயணத்தில் சொல்லப்பட்டுள்ளது. எனவே தக்ஷிணாமூர்த்தி வடிவத்தில் உள்ள தேவி சிவவிஷயமான ஞானத்தைப் பக்தர்களுக்கு அருளுபவள் எனக் கூறலாம். இவ்வாறு தேவி வடிவிலுள்ள தக்ஷிணாமூர்த்தியின் வடிவத்தை லலிதா ஸஹஸ்ரநாமம், "தக்ஷிணாமூர்த்தி ரூபிணி, ஸனகாதி ஸமாராத்யா, சிவக்ஞான ப்ரதாயினி" என்னும் மூன்று புனித நாமங்களினால் போற்றியுள்ளது.

எல்லா உலகங்களுக்கும் ஸத்குருவாகவும், பிறவியாகிய நோய்க்கு வைத்தியனாகவும், எல்லா வித்தைகளுக்கும் நிதியாகவும் உள்ள ஸ்ரீ தட்சிணாமூர்த்தியின் திருவடிகளைப் போற்றிப் பிரார்த்தனை செய்து வந்தால் அவருடைய அருளால் இக, பர சுகங்களைப் பெற்று வாழலாம். ௐ

# ஆண்டாள் அருளிய அட்டவணை



எதிலும் ஒரு ஒழுங்கும், முறையும் வேண்டும். அப்போதுதான் காரியங்கள் துரிதமாயும், எளிதாயும் நடக்கும். இதற்கு அட்டவணை போட்டுக்கொள்வது வழக்கம். பள்ளிக்கும், பரீட்சைகளுக்குந்தான் அட்டவணை என்றில்லாமல், எதற்கும் ஒரு அட்டவணைப் போட்டுக் கொள்வது சிறந்தது.

ஒரு ஸ்ரீவைஷ்ணவர் தினமும் கடைப்பிடிக்கவேண்டியவற்றை, ஆண்டாள் மிகத் தெளிவாக அருளியிருக்கிறாள். ஒரு நாளின் ஐந்து காலங்களிலும் ஹரி பக்தர்கள், ஹரியிடமிருந்து மனத்தால் சற்றும் விலகக் கூடாது.

அபிகமநம் :

எம்பெருமானே! இன்றையப் பொழுதில் நடப்பவைகள் நல்லதாகவே இருக்க வேண்டும். நல்ல காரியங்கள் எதுவும், நின்னருளினால், தட்டுத் தடங்கலின்றி, நிறைவேற வேண்டும் என்று பிரார்த்திப்பது. பெரியவர்கள், சிற்றஞ்சிறுகாலையில், எழுந்திருக்கையில், ஹரி ஹரி என ஏழு தரம் அநுஸந்திப்பார்கள். இதை ஆண்டாள், தனது ஆறுவது திருப்பாவைப் பாசுரத்திலே, "வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை, உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும் மெள்ள எழுந்து, அரி என்ற பேரரவம் உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய்" என்கிறாள். ஆக, பெரியவர்கள் துயிலெழுகையில், 'ஹரி ஹரி' என்று ஸ்மரித்துக்கொண்டேதான் எழுந்திருப்பார்கள். ஒரு நாளை ஆரம்பிக்கும்போதே இவ்விதம் எம்பெருமான் சம்பந்தத்தோடு ஆரம்பித்தால், நல்ல பலனுக்கு என்ன குறை இருக்க முடியும்?

உபாதாநம் :

எம்பெருமானின் திருவாராதனத்திற்கு வேண்டிய திருத்துழாய், புஷ்பம் முதலானவற்றை வெகு அக்கறையாக சேகரிக்க வேண்டும். "உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்" என்கிற திருப்பாவையில் அருளியிருப்பதே போல, அன்றலர்ந்த தாமரைப் பூக்களையும், மற்றும் மாதவி மலர்களையும், மற்றும் ஜாதி, முல்லை, இருவாட்சி, மல்லிகை, சம்பகம், வகுளம் போன்ற மலர்களைப் பரிசுத்தமான மனத்தோடு பறித்துக் கொணர வேண்டும். இந்தப் புஷ்பங்களோடு, இன்னும் எட்டு புஷ்பங்களை முக்கியமாகக் கவனத்தில் கொள்ள வேண்டும். 1. அஹிம்ஸை, 2. புலனடக்கம், 3. எல்லா உயிர்களிடத்தும் அன்பு. 4. மன்னிக்கும் மனம். 5. எம்பெருமானைப் பற்றிய ஞானம். 6. ஒழுக்க நெறிகள். 7. தியானம். 8. வாய்மை ஆகியவையே வாடாத புஷ்பங்கள். இவற்றை கைக்கொண்டால்தான், நம் நோக்கங்கள் நிறைவேறும்.

மலர்களைக் கொய்து, மாலையாகக் கட்டி, திருமாலையே மாலைகளால் கட்டிப் போட்ட மாதரசி ஆண்டாள். பூமாலையாலும் பாமாலையாலும் கட்டிப் போட்டாள். கிளி, குயில் போன்றவற்றையும் தன் திருவாக்கால் பாடி, ஏற்றம் பெறச் செய்தாள். அவற்றுக்கு அன்போடு பாலன்னம், பழம் ஊட்டி வளர்த்தாள். இதன் மூலம் அஹிம்ஸையை மறைமுகமாய் நன்கு போதித்தாள். "மானிடர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்—மற்றை நம் காமங்கள் மாற்று" என்பதில் இவளது புலனடக்கத்தை உணரலாம். எம்பெருமானைப் பற்றி அளவற்ற ஞானம், தபம், தியானம் போன்றவற்றில் மிக உறுதியாக இருந்ததாலேயே, அவள் எண்ணியபடி, எம்பெருமானை அடைய முடிந்தது. உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் எம்பெருமானுக்காகவே என்று உணர்ந்து, அவனுடைய திருஉள்ளம் குளிரவேண்டுமென்று அவனுக்குப் பக்தியுடன் ஸமர்ப்பித்து மகிழ்வார்கள். தன்னுடைய உபயோகத்துக்கு எனத் துளியும் எண்ணமாட்டார்கள். அதனால்தான் மையிடுதல், பூச்சூட்டிக் கொள்ளுதல் மற்றும் நெய், பால் போன்றவற்றை தவிர்க்க வேண்டுமென்று உபதேசித்தாள்.

மைதிலி வேணுகோபால், சென்னை

இஜ்யை :

எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் போன்ற ஸகல உபசாரங்களையும் தம் சக்திக்கேற்ப செய்து, அவனுக்குப் போக்யமான அவன் திருஉள்ளம் உகக்கும்படி ஸமர்ப்பித்து மகிழ் வதே இஜ்யை.

"நாறு நறும்பொழில் மாலிருஞ்
சோலை நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய்
வாய் நேர்ந்து
பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த அக்கார
வடிசில் சொன்னேன்"

என்ற ஆண்டாளின் கூற்றும், அது நிறைவேறிய விதமும் மிகவும் உணர்ச்சிவசப்படக் கூடிய, நெஞ்சை நெகிழ வைக்கின்ற நிகழ்ச்சிகள்.

எம்பெருமானை நினைந்து நினைந்து உள்ளம் உருகி, உடலும் தளர்வுற்ற நிலையில், ஆண்டாள் வாசிக கைங் கர்யமாக, கண்ணனுக்குப் பரம போக்யமான வெண்ணெயும், பால் சோறுமூட, நெய் பெய்து, முழங்கை வழி ஓடும்படி எம்பெருமானுக்குக் கண்டருளப் பண்ணினாள்.

பின்னால், எம்பெருமானாரோ, இதை அநுஸந்தித்து, உள்ளம் உருகி, வாசிக மாத்ரமாக இருந்த ஆண்டாளின் மனோரதத்தை நிறை வேற்றவேண்டுமென ஸ்ரீரங்கத்தி லிருந்து உடனேயே புறப்பட்டுத் திரு மாலிருஞ்சோலை மலை எழுந்தருளி நூறு தடா வெண்ணெயும், நூறு தடா அக்கார வடிசிலும் ஸமர்ப் பித்த கையோடு, ஸ்ரீ வில்லிபுத்தூர் எழுந்தருளி ஸ்ரீ ஆண்டாளை தெண்ட னிட்டு நின்றார்.

தன் மனத்தையறிந்து, அதன்படி எம்பெருமானார், எம்பெருமானுக்கு குறைவற செய்ததற்கு மனமுகந்த ஆண்டாள், "என் அண்ணா!" என்ற படியே, அர்ச்சாவதாரத்தின் விதி முறைகளையும் கடந்து, எழுந்து வந்து, எம்பெருமானாரை ஆரத் தழு விக் கொண்டாளாம், ஒரு ஸஹோ தரிக்கே உரிய பாசத்துடன்.

இன்று, ஒவ்வோர் ஸ்ரீ வைஷ்ணவ ரின் இல்லந்தோறும், "பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்று வாழித்திருநாமம் அநுஸந்திக் கப்படுவதன் பின்னணி இதுவே.

இதுவே இஜ்யை எனப்படும். இதையும் ஆண்டாள் நாச்சியார் திருமொழியிலும், திருப்பாவை யிலும் அருளியிருக்கிறாள்.

ஸ்வாத்யாயம் :

நற்போது போக்குதல். எம்பெரு மானைப் பற்றியே தெரிந்து எழுதி, வாசித்து, வணங்கி, கேட்டும் பொழு தைப் போக்குவதே ஸ்வாத்யாயம் எனப்படும்.

எம்பெருமானுக்கு, தாம் பக்தி யோடு, தூய்மையாக செய்து முடித் தவற்றைக் கண்டருளப் பண்ணியதும், அந்த பகவத் பிரஸாதத்தைத் தாமும் ஸ்வீகரித்துக் கொண்டபின், பொழுதை இனிதாகக் கழித்து, மன மகிழ்வு பெறுவதற்காக, திருமந்தி ரம், த்வயம், சரமஸ்லோகம், பிரபந் தங்கள் முதலியவற்றை அநுஸந்திப் பார்கள். பெரியவர்கள் கால க்ஷேபம் செய்ய, மற்றவர்கள் கேட்டு ஆநந்திப்பார்கள். ஒருவருக்கொரு வர் ஞானத்தை பரிமாறிக் கொள் வார்கள்.

"கேசவனைப் பாடவும்", "நாமம் பலவும் நவில்", "முகில் வண்ணன் பேர் பாட", "பங்கயக் கண்ணனைப் பாடு" — என்றெல்லாம் அருளியிருப் பது இதையே குறிக்கும்.

யோகம் :

எம்பெருமானின் திருவடிகளைத் தியானம் செய்துவிட்டு, படுக்க வேண்டும். நித்திரை செய்யும் போது கூட, எம்பெருமானின் திரு வடிகளிலே, தன் தலையை வைத் திருப்பதாய் தியானம் செய்து கொண்டே உறங்க வேண்டும். ஆண்டாள், எம்பெருமானைப் பற்றி சிந்திப்பதையே, பேரின்பமாகக் கொண்டாள். பேரின்பத்தைக் கண் டவனுக்கு, சிற்றின்பம் எதற்கு? அள வற்ற ஞானம், பக்தி, வைராக்யத் தால், உலக போகங்களை வெறுத்து, எம்பெருமானின் திருவடிகளின் சுவையை அறிந்தாள். அல்ப சுகங் களைக் கனவிலும் அவள் கருதவே யில்லை.

அதனால்தான் அவளது கனவு பலித்தது, அவள் புகழ் பெற்றது. ஸ்ரீ வைஷ்ணவத் திருமணங்களிலே, கன வுப் பாசுரங்களைப் பாடியபடியே தான், மணப்பெண்ணுக்குக் கூறை உடுத்துவர். கனவுப் பாசுரங்களைப் பாடித்தான் சீர் பாடுவார்கள். இவ்வாறு திருமணத்தில் சில நிகழ்ச்சிகள் விசிஷ்டாத்வைதத்தோடு பின்னிப் பிணைந்தன.

படுத்துக் கொள்கையில் எதை நினைத்துக் கொள்கிறோமோ, அது தான் கனவாக விரியும்.

எம்பெருமானையே ஸதா தியானம் செய்து, ஆநந்தமேலிட்டு, மனம் உருகி, உடல் தளர்ந்து நிற்பதே யோகம்.

ஆண்டாள் மேற்கொண்ட இந்த யோகத்தின் பலனேதான், கன வாகக் குறிப்புக் காட்டி, பின் திருக் கல்யாணமாக முடிந்தது.

இப்படி, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு, தினசரி அட்டவணையையும் ஆண் டாள் பாடி அருளியிருக்கிறாள்.

இவற்றை கேட்டும், படித்தும் ரஸித்ததோடு விட்டுவிடாமல், நாமும் கடைப்பிடித்தால்தான், ஆண்டாளின் திரு உள்ளமும் உகக் கும், அவளுக்குக் கிடைத்த பெரும் பேறும் நமக்கும் கிடைக்கும்.

"ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சர ணம்".



" யாகாவாராயினும் நாகாக்க
காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்கப்பட்டு "
" தீயினுற் சுட்டபுண் உள்ளாறும்
ஆறுதே
நாவினுற் சுட்ட வடு"

என்னும் இரண்டு குறள்களும்,"நெல்லைக் கொட்டிஞல் வாரலாம், சொல்லைக் கொட்டிஞல் வாரமுடியாது" என்ற பழமொழியும் ஒருவருக்கொருவர் உரையாடும் போது நாக்கைக் கட்டுப்படுத்த வேண்டியதின் அவசியத்தை உணர்த்துகின்றன. ஆயினும் நடைமுறையில் இந்த அறிவுரைகளைக் கடைப்பிடிப்பது சிரமசாத்யமென்பதையும் நாவின் தடித்தவார்த்தைகள் காரணமாக, உள்ளத்தில் நல்லெண்ணமிருந்தும், அது வெளிப்படாமல் அவதிப்படுவதையும் பல சமயங்களில் காண்கிரேம்.

# நாவடக்கம்

இந்த விஷயத்தை விளக்கும் வகையில் வால்மீகி பகவான் இரண்டு வரலாறுகளைத் தனக்கே உரித்தான வகையில் விவரித்துள்ளார். அந்த இரு சுவையான வரலாறுகளேயும் ஆராய்வோம்.

சம்பாஷித்துக்கொண்டிருக்கும் போது சில சமயங்களில் வார்த்தைகளின் சுவாரஸ்யத்தில் நம்மை மறந்தும், மீறியும் சொல்லக்கூடாத விஷயங்கள் அளவு முறையாக வெளிப்படும் தருணத்தில் நிலைமை மோசமாவதற்குள், நாக்கைக் கட்டுப்படுத்தி விஷயத்தை மாற்றி, சந்தேகத்திற்கிடமின்றித் தப்பித்துக் கொள்வதற்குத் தனி சாமர்த்தியம் தேவை. இந்த வகையில் அமைந்துள்ளது, சுமந்திரர் கங்கைக் கரையினின்று திரும்பி அயோத்தியை அடைந்ததும் தசரதனுடனும், கௌஸல்யையுடனும் உரையாடிக் கொண்டிருந்த போது ஏற்பட்ட ஒருநிகழ்ச்சியாகும்.

சீதை வனத்தில் மிகவும் வருத்தமும் கஷ்டமும் கூடியவளாக இருப்பாள் என்று கௌஸல்யை நினைத்து சுமந்திரரைப் பார்த்து வாஞ்சையுடன் சீதையைப் பற்றிய விவரங்களைக் கேட்கிருள். சீதைக்கு எவ்வித கஷ்டமும் வருத்தம் இல்லை என்றும் ராமலக்ஷ்மணர்களுடன் வெகு உற்சாகமாகவும் உல்லாசமாகவும் பொழுதைப் போக்கி வருகிருளென்றும் சுமந்திரர் பலவிவரங்களைக் கூறி வருகிருர். சீதை சொல்லியனுப்பிய பல விஷயங்கள் அவருடைய நினைவிற்கு வருகின்றன. சீதை கூறிய வார்த்தைகளைக் கூற நினைத்த உற்சாகத்தில் சீதை கைகேயியை நிந்தித்துக் கூறிய வார்த்தைகளைப் பற்றி ஆரம்பித்த பிறகே அவற்றைக் கூறுவது எவ்வளவு தவறு என்பதையும் அவற்றின் விளைவு விபரீதத்தில் முடியக்கூடும் என்பதையும் சுமந்திரர் உணர்கிருர். ஆகவே இந்த இக்கட்டான நிலையில் 'கைகேயியைப் பற்றி சீதை என்ன கூறினள்" என்று கூற ஆரம்பித்த சுமந்திரர் மிகவும் பரிச்ரமப்பட்டு, (தன்னை அறியாமல் வெளிவந்த வார்த்தைகளை நாவை அடக்கி மாற்றி) "இவ்வளவு தான் எனக்கு ஞாபகமிருக்கிறது, மற்றவை ஞாபகத்துக்கு வரவில்லை". (பக்ஷிகளின் சப்தத்தினுல் என்காதில் விழவில்லை) என்று ஒரு விவரத்தையும் கூருமல் வார்த்தைகளைத் திசை திருப்பி வேறு விஷயங்களைக் கூறி கௌஸல்யை சந்தோஷப்படுத்திஞர் என்று வால்மீகி கூறிஇருக்கிருர்.

உயிருக்குயிராய் நேசித்து வாழ்பவர்களிடையிலும் சம்பாஷணை மத்தியில் தன்னை அறியாமல் வெளிவரும் சகஜமான வார்த்தைகளில் குற்றம் காணக்கூடிய த்வனி (உட்பொருள்) ஏற்பட்டால் மனத்தாங்கலும் உண்மையிலேயே நிஷ்டூரமான பதில்களும் கிடைப்பதைக் காணலாம். இவ்வாறன ஒரு ரஸமான வரலாறு ராமனும் பரதனும் சித்ரகூடத்தில் சந்தித்து உரையாடும் சந்தர்ப்பத்தில் விளக்கப் பட்டுள்ளது.

ஸ்ரீராமனை அயோத்திக்குத் திருப்பி எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து பட்டாபிஷேகம் செய்விக்கப் பரதன் வெகு பிரயாசைப்படுகிருன். அவ்வாறு செய்து முடித்தாலன்றித் தனக்குச் சாந்தி ஏற்படாதென்று அரற்றிக் கொண்டே செல்லும் பரதன் ராமனைப் போலவே ஜடை தரித்து, மரவுரி உடுத்து, புழுதியடிந்த மேனியுடன் ராமன் திருவடிகளில் வீழ்ந்து சாஷ்டங்கமாக நமஸ்கரிக்கிருன். பரதன் வருவதற்கு முன்னமே ராமன் சைன்யங்களையும் பட்டத்து யானையையும் தூரத்திலிருந்து லக்ஷ்மணனுடன் பார்த்த போது வெண்கொற்றக் கொடையைக் காணுததால் தசரதருக்கு விபரீதமான விளைவுகள்

" சுகி "

ஏற்பட்டிருக்குமோ என்ற சந்தேகத்துடன் இருக்கிருன். இந்த மன நிலையில் தன்னைப்போலவே தவவேடத்துடன் விழுந்து கிடந்த பரதனை வாரி அணைத்து உச்சி முகர்ந்து, அவனைச் சந்தித்த ஆனந்தக்கண்ணீர் ஒருபுறம் பெறுக, பரதனைப் பார்த்து பல கேள்விகளைக் கேட்கிருன். கேள்விகளின் ஆரம்பத்தில் தசரதருடைய உடல் நலத்தையும், பரதன் தவவேடந்தரித்து வனத்திற்கு வந்துள்ள காரணத்தையும் கேட்கிருன். இந்த விவரத்தை வால்மீகி பகவான்
"க்வனுதே பூத் பிதாதாதய தர்ணய மீஹா கத: | நஹித்வம் ஜீவிதஸ்தஸ்யவநம் ஆகந்து மர்ஹஸி || (அயோ-100-4) என்ற சுலோகத்தில் விளக்கி இருக்கிருர். "பரத! ஜீவனத்துக்கு வந்த சமயத்தில் உன் தந்தை எங்கிருந்தார். அவர் உயிருடனிருந்தால் நீ வனத்திற்கு வருவது கூடாதே" என்பது இந்த ஸ்லோகத்தின் பொருள்.

# பெண்ணுக்கு அழகு எது?

பெண்களே! நீங்கள் ஒவ்வொருவரும் மகாராணியாகத் திகழ வேண்டும் என்பதே என் விருப்பம். 'மகாராணிகள்' என்றால் எவ்விதத்தில்?

நம் நாட்டில் பூர்வத்தில் மகாராணிகள் எல்லாம் அறிந்தவர்களாகவும், கற்பரசிகளாகவும் இருந்தார்கள். அவர்களுக்கு நாட்டு நடப்புகள் நன்கு தெரியும். ஆயினும் அவர்கள் எப்படி வசித்தார்கள்? பிறர் காணாமல் சாளரம் வழியாகவே வெளியுலகைப் பார்த்தார்கள். சாத்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள பெண் தர்மங்களில் மிக உயர்ந்த நிலை இதுவே.

அந்த மகாராணிகளைப் போலவே நீங்கள் வாழ வேண்டும். பிறர் உங்களை வெறித்து நோக்கும்படியாகவும், உங்களைப் பற்றிப் பலர் பேசும்படியாகவும், வெளியே திரிவது உங்களுக்கு அழகல்ல. உடல் அழகைப் பராமரிப்பதைவிட, அழகிய பண்பாடுகளை வளர்த்துக் கொள்வதே உங்கள் தர்மம்.

— ஸ்ரீ ஸத்ய ஸாயிபாபா.

# தெரிந்து கொள்ளுங்கள்

ஆதிசங்கரர் நமது இந்துமத வழிபாட்டை ஆறுபிரிவுகளாகப் பிரித்தார். அவை :

காணாபத்தியம் : கணபதியை வழிபடுவது.
சாக்தம் : பராசக்தியை வழிபடுவது
சைவம் : சிவனை வழிபடுவது.
வைணவம் : விஷ்ணுவை வழிபடுவது.
கௌமாரம் : முருகனை வழிபடுவது.
சௌரம் : சூரியனை வழிபடுவது.

தொகுத்தவர் : திருமதி கமலா மாரியப்பன் — கோவை.

இங்கு "தேபிதா" — "உன்னுடைய தகப்பனார்" என்ற சொற்கள் ராமனால் கூறப்பட்டதாகச் சித்தரித்துள்ளதைக் காணும் போது மனித இயற்கையின் பல அம்சங்கள் வெளிப்படுகின்றன அவற்றை ஆராய்வோம். பரதன் மீது உயிரையே வைத்திருந்த ராமன் கூறிய இந்த வார்த்தைகளில் அவன் எவ்விதமான தவறுதலையும் நினைக்காமல் இருந்திருக்கலாம். அல்லது ராமன் பரதன் மீது வைத்திருந்த அபாரமான பாசத்தின் மத்தியில் கைகேயியின் செயல்களால் ஒரு அளவு புண்பட்டமனத்துடன் இருந்த ராமன் உரிமையோடும் சகஜமாகவும் இவ்வாறு கூறி இருக்கலாம். ராமனுடைய எண்ணம் எவ்வாறாக இருந்திருப்பினும் பரதனை இந்த மொழிகள் மிகவும் புண்படுத்தி விடுகின்றன. ராமன் கேட்ட கேள்விகள் யாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த பரதன் துடிதுடிப்புடன் பதிலளிக்கும் போது, ராமனைப் பார்த்து "த்வாமேவசோசன் த்வயிதரசனேப்ஸு: | த்வய்யேவஸக்தாதமனிவர்த்யபுத்திம், த்வயாவிஹீன ஸ்த்வயிசோக ருக்ண ! த்வாம் ஸம்ஸ்மரன் அஸ்தமித : பிதாதே|| (அயோ-101-9) என்று கூறி உரையை முடிக்கிறான். இதன் பொருள் "உம்மைப் பற்றியே சோகித்து, உம்மைத் தரிசிப்பதிலேயே ஆசையுள்ளவராகி உம்மிடத்திலேயே வைக்கப்பட்ட மனதை அந்த சிந்தனையை விட்டு நீக்க முடியாதவராய் உம்மைப் பிரிந்ததே காரணமான வ்யாதி மேலிட்டு உம்மையே நினைத்துக் கொண்டு உம்முடைய தகப்பனார் காலமாகி விட்டார்" என்பதாகும். இந்த வார்த்தைகள் ராமனின் "தேபிதா" என்னும் சொல் எந்த அளவிற்குப் பரதன் மனத்தைப் புண்படுத்தியதென்பதையும் சாதாரண மனிதன் என்ற நிலையில் ராமனின் மேற்படி வார்த்தைகளைப் பொறுக்க முடியாத பரதன் தன்னுடைய தமையனுருடன் உரையாடும் நிலையையும் மறந்து 'ஒருவார்த்தைக்குப்பதில் ஒன்பதுவார்த்தைகள்' என்றஉலக ரீதியில் ராமனுக்குப் பதிலளித்துள்ளது விளங்குகிறது. உலகை உய்விக்கவும், தர்மத்தை நிலைநாட்டவும் அவதரித்த அவதார புருஷனை சாதாரணமான மனிதனின் இயல்பை எப்படிவெளிப்படுத்துகிறார்என்பதை உலகத்திற்கு அறிவிப்பதற்காகவே வால்மீகி "தேபிதா" என்ற சொற்களை உபயோகப்படுத்தி இருக்கிறார் என்பது தெளிவாகிறது.இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ராமன் பரதனுடன் சம்பாஷித்துள்ள பல சந்தர்ப்பங்களில் வால்மீகி தசரதரைப் பற்றி ராமன் கூறும் போது "ந; பிதா" "நம்முடைய தகப்பனார்" என்ற சொற்களை உபயோகப்படுத்தியிருக்கிறார் என்பதைக் காணும் போது, வால்மீகி உலக இயற்கையை உணர்த்துவதற்காகவே ஓர் இடத்தில் மட்டும் "தேபிதா" என்று கூறியிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

*




# திதி

பஞ்ச + அங்கம் = பஞ்சாங்கம்; பஞ்ச = ஐந்து, அங்கம் = பிரிவு. ஆகவே வானியல் பற்றிய செய்திகளைக் கூறும் ஐந்து பிரிவுகளைக் கொண்டது பஞ்சாங்கம்.

பஞ்சாங்கத்திலுள்ள ஐந்து அங்கங்கள் வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் ஆகியனவாம.

இவற்றுள் திதி என்பது தற்காலத்தில் தியதி என்றும், தேதி என்றும் மருவி வழங்கப்படுகின்றது. Date என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு மூலச் சொல் எதிலிருந்து வந்துள்ளது பார்த்தீர்களா?

அமாவாசைக்கு அடுத்த நாளைப் 'பாட்டிமை' என்று அழைப்பார்கள். பௌர்ணமிக்கு அடுத்த நாளும் இதேபோல பாட்டிமைதான். பாட்டிமை என்னும் சொல்லுக்குச் சரியான சொல் 'பிரதமை' என்பது. பிரதமை என்னும் சமஸ்கிருதச் சொல்லின் பொருள் தொடக்கம், முதன்மை, முதலாவது என்பது. அதாவது முதலாவது நாள்.

ஒரு மாதத்தில் 30 திதிகள் உள்ளன. ஒவ்வொரு நாளும் ஒரு திதி.

அமாவாசை – வெறும் வானம்; பௌர்ணமி – முழு நிலவு உள்ள வானம்.

அமாவாசைக்குப் பிறகு நிலவின் பிறைகள் வளர்ந்து வருவதால் அந்த நாட்களை வளர்பிறை நாட்கள் என்றும், பௌர்ணமிக்குப் பிறகு நிலவு தேய்ந்து வருவதால் அந்த நாட்களைத் தேய்பிறை நாட்கள் என்றும் குறிப்பிடுவார்கள்.

அமாவாசைக்கு அடுத்த 15 திதிகள்:

பிரதமை – முதலாவது.
துதியை – இரண்டாவது.
திருதியை – மூன்றாவது.
சதுர்த்தி – நான்காவது.
பஞ்சமி – ஐந்தாவது.
சஷ்டி – ஆறாவது.
சப்தமி – ஏழாவது.
அஷ்டமி – எட்டாவது.
நவமி – ஒன்பதாவது.
தசமி – பத்தாவது.
ஏகாதசி – பதினொன்றாவது.
துவாதசி – பனிரெண்டாவது.
திரயோதசி – பதிமூன்றாவது.
சதுர்த்தசி – பதினான்காவது.

இதற்கு அடுத்த நாள் முழு நிலா. அதாவது பௌர்ணமி.

பௌர்ணமிக்கு அடுத்த பதினான்கு நாட்கள் ஏற்கனவே குறிப்பிட்ட பிரதமை முதல் சதுர்த்தசி வரையுள்ள நாட்கள். அதன் பின் அமாவாசை.

இவை திரும்பத் திரும்ப வந்து செல்கின்றன. ஒவ்வொரு திதியும் அந்த நாள் எத்தனையாவது நாள் என்ற பெயரைத்தான் குறிக்கின்றது.

அமாவாசைக்குப் பிறகு பிறை வளர்ந்து பௌர்ணமி ஆகும் வரையுள்ள நாட்கள் 'சுக்கில பட்சம்'. சுக்கிலம் என்பதற்கு வெண்மை என்றும், பட்சம் என்பதற்குப் பகுதி என்றும் பொருள். சுக்கில பட்சத்திற்குப் பூர்வபட்சம் என்னும் வேறு பெயரும் உண்டு.

இதே போல, பௌர்ணமிக்குப் பிறகு பிறை தேய்ந்து நிலவு முழுவதும் கறுமையாகக் காட்சியளிப்பது 'கிருஷ்ண பட்சம்'. கிருஷ்ண = கறுமை; பட்சம் = பகுதி. கிருஷ்ணபட்சம் என்பதற்கு அமர பட்சம் என்ற வேறு பெயரும் உண்டு.

சுருக்கமாகச் சொல்லப்போனால் திதி என்பது ஆகாயத்தில் சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையில் உள்ள பல்வேறுபட்ட தூரத்தைக் குறிக்கும்.

சேலம அன்பரசு

சந்திரன் பூமியின் துணைக்கோள். இது பூமியைச் சுற்றி வருகிறது. பூமி சூரியனைச் சுற்றி வரும்போது நிலவும் சூரியனைச் சுற்றி வர வேண்டியுள்ளது.

இவ்வாறு சந்திரன் பூமியுடன் சூரியனைச் சுற்றிவரும்போது சூரியனுக்கும், சந்திரனுக்கும் இடையிலுள்ள பல்வேறு தூர அளவீடுகளைக் குறிப்பதே திதி. இவற்றை முப்பதாக ஒழுங்குபடுத்தினர்.

ஒரு காலத்தில் சந்திரன் பூமியைச் சுற்றி வரும் நாட்களை அடிப்படையாக வைத்தே மாதத்தின் நாட்கள் கணக்கிடப்பட்டன. ஒரு அமாவாசை நாளுக்கும் மற்றொரு அமாவாசை நாளுக்கும் இடைப்பட்ட 29½ நாட்கள் 'ஒரு சந்திர மாதம்' என்று அழைக்கப்பட்டது.

வானியலின் ஒரு பகுதிதான் திதி. சோதிடர்கள் தமது கலைக்கு இதைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். ★

# கீதை காட்டும் நல்வழி

### மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி 23

ஹிந்து மதத்தின் தனிப்பெருமை கீழ்க்காணும் சுலோகத்தில் பகரப் படுகிறது. குருவிடமிருந்து ஞானத் தைப் பெறுகின்ற சிஷ்யன் அல்லது மாணவன் அவரிடம் கேள்விகளைக் கேட்கலாம். பிறகு அதை அலசி ஆராய்ந்து தான் விரும்பியதைச் செய்யலாம் என்பதுதான் அந்த தனிப்பெருமையாகும். அதைப்பற்றி பகவான் கூறுகிறார்.

இதி தே ஞாணமாக்யாதம்
குஹ்யாத் குஹ்யதரம மயா|
விம்ருச்யைததசேஷேண
யதேச்சஸி ததா குரு || (18—63)

"மறைபொருள்களில் எல்லாம் மறைபொருளாகிய ஞானம் இங் ஙனம் உனக்கு இயம்பப்பட்டது. இதை முழுதும் ஆராய்ந்து விரும் பியதைச் செய்வாயாக".

இயற்கையில் அற்புதமான சக்தி கள் பல மறைந்து கிடக்கின்றன. இந் நூற்றாண்டில் அப்படி மறைந்து கிடந்த பல சக்திகள் மனித ஆராய்ச் சியால் விஞ்ஞானக் கண்டுபிடிப்பு களாக வெளிவந்துள்ளன. வானொலி, டிவி, கம்ப்யூடர், ராடார், ரோபோ போன்ற பலவும் மறைந்துகிடந்த இயற்கை சக்திகளின் வெளிப்பாடு களேயாகும். இருந்ததை வெளிப் படுத்துதலை 'Discovery' (கண்டு பிடிப்பு) என்கிறோம். Cover என் றால் மூடி என்பது பொருள். நமது அறியாமை உண்மையை மூடியிருந் தது. அறியாமை நமது ஆராய்ச்சி யால் அகன்றதும் உண்மை வெளிப் படுகிறது.

விளங்காததை விளக்குவது சாஸ் திரம். விஞ்ஞானம், மெய்ஞானம் இரண்டிற்கும் இது பொருந்தும். இயற்கையைப் பற்றி எண்ணிறந்த சாஸ்திரங்கள் இருக்கின்றன, அவை அனைத்தும் விஞ்ஞான சாஸ்திரம் ஆகிறது. விஞ்ஞான சாஸ்திரத்தில் மூடக் கொள்கைக்கு இடம் கிடை யாது. கொள்கையளவில் உள்ளதை ஆராய்ந்து பார்த்து விமசர்சனம் செய்து பின் ஒப்புக் கொள்ள வேண் டும். அது மெய்ஞானத்திற்கும் பொருந்தும். நமது ஹிந்துமத சாஸ் திரம் யாரையும் எதையும் குருட்டுத் தனமாக ஒப்புக்கொள்ளச் சொல்ல தில்லை. மனித வாழ்க்கையைப் பற்றிய சாஸ்திரம் யோக சாஸ்திரம் அல்லது பிரம்ம வித்தை எனப்படு கிறது.

இயற்கையில் பல்வேறு சக்திகள் எவ்விதம் மறைந்து கிடக்கின்ற னவோ, ஆனால் ஆராய்ச்சிக்குப் பின்னர் தெரியவருகின்றனவோ அது போல சாஸ்திரங்களிலும் பல உண் மைகள் மறைந்துகிடக்கின்றன. ஆராய்ச்சிக்குப் பின் ஒருவனுக்குத் தெரியவருகின்றன. உண்மை மறைந் திருப்பதால் நமது வேத சாஸ்திரங் கள் மறை நூல்கள் என்றழைக்கப் படுகின்றன. 'மறை' என்ற பதமே 'வேதம்' என்று பொருள்படுகிறது.

'குஹ்யம்' என்றால் ரகசியம் அல்லது 'மறை பொருள்' என்பது பொருள். மறைந்துள்ள உண்மை என்று அதைப் பொருள் கொள்ள லாம். மறைக்கப்பட்ட உண்மை அல்ல அது. பகவான் இதுகாறும் அர் ஜுனனுக்குச் சொன்னதை 'குஹ் யாத் குஹ்யதரம், (மறைபொருள் களிலெல்லாம் மறைபொருள்) என்று குறிப்பிடுகிறார். இதன் பொருள் என்ன? வேத உபநிடதங்கள் மற்றும் கீதை போன்ற சாஸ்த்திரங்களை ஒரு முறை, இரு முறை படித்தால் அவற் றில் உள்ள உண்மை எளிதில் புரிந்து விடாது. திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். நன்கு ஆராய வேண்டும். பிறகுதான் உண்மை புரியவரும்.

அவ்வாறு உண்மையை உணர்ந்து பின்னும் குரு சொன்னார் என்பதற் காக மூடபக்தி காரணமாக அவர் சொன்னதைச் சிஷ்யன் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் கிடை யாது. செயல் சுதந்திரம் சிஷ்ய னுக்கு அளிக்கப்படுகிறது.

---

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

---

'யதேச்சஸி ததா குரு' என்ற பக வானுடைய வாக்கியம் 'உனக்கு எது விருப்பமோ அப்படியே செய்' என்று பொருள்படுகிறது. சில மதங்களைப் போல் இப்படித்தான் தங்கள் மதஸ் தர்கள் செய்ய வேண்டும் என்ற ஹிந்துமதம் ஒருபோதும் எவரையும் கட்டாயப்படுத்துவதில்லை. ஒருவ னது பகுத்தறிவிற்கு ஹிந்துமதம் பூரண சுதந்திரம் அளிக்கிறது. உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி மற்றும் ஆன்ம வளர்ச்சிக்கு சுதந் திரம் மிகமிக இன்றியமையாதது. சீடன் குருவினிடம் கேள்வி கேட் பதற்கு ஹிந்துமதத்தில் பூரண சுதந் திரம் உண்டு. புகட்ட வேண்டியது யாவையும் சொல்லியான பிறகு அர் ஜுனனுக்கு பகவான் பூரண கருத்துச் சுதந்திரத்தையும் அளிக்கிறார். 'நான் சொல்கிறேன் நீ செய்தாக

வேண்டும். என்னைக் கேள்வி கேட்க நீ யார்?' என்ற கோட்பாட்டிற்கு ஹிந்துமதத்தில் இடமில்லை. எல்லாக் கேள்விகளுக்கும் ஹிந்துமதம் இடம் தருகிறது.

அடுத்து மனித முயற்சிகள் யாவும் எதில் முற்றுப் பெறுகின்றன என்ற கேள்விக்கான பதிலை இனிவரும் மூன்று சுலோகங்களில் பகவான் விளக்குகிறார்.

ஸர்வ குஹ்யதமம் பூய:
ச்ருணு மே பரமம் வச:|
இஷ்டோSஸி மே த்ருடமிதி
ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் || 64

"அனைத்திலும் ஆழ்ந்த எனது மேலாம் மொழியை மீண்டும் நீ கேள். நீ எனக்கு உற்ற நண்பன். ஆகையால் உனக்கு நலம் பயப்பதை நான் நவிலுகிறேன்"

கடலுக்கடியில் முத்து, பவளம் போன்ற விலைமதிப்பற்ற வஸ்துக்கள் கிடக்கின்றன. அவற்றை எல்லோரும் மூழ்கிப்போய் வெளிக் கொணர முடியாது. அதில் தனிப் பயிற்சியும் திறமையும் பெற்றவர்களுக்கே அது இயலும். பகவான் கீதையில் புகட்டும் கருத்துக்களும் மிகவும் ஆழ்ந்த பொருள் கொண்டவை. எல்லோரும் அவற்றைப் படித்து உடனே புரிந்து கொள்ள முடியாது.

உலக அறிவைப் பொறுத்தமட்டிலேயே எல்லோராலும் வேதியியல், கணித இயல், விண்ணியல், மண்ணியல், நீரியல் போன்ற பல்வேறு பிரிவுகளில் உள்ள நுட்பமான கருத்துக்களைப் புரிந்து கொள்ள முடியுமா? முடியாது. ஒவ்வொன்றிலும் தனித் திறமையும் தகுதியும் பெற்றோருக்கே அது புரியும்.

'குஹ்யம்' என்ற வார்த்தைக்கு ரகசியம் அல்லது மறை பொருள் என்ற அர்த்தந்தைச் சிலர் தவறுகப் புரிந்து கொண்டு 'இதை எல்லோரிடமும் சொல்லக்கூடாது. மறைத்து வைக்கவேண்டும்' என்று எண்ணி ஒரு சில குறிப்பிட்ட பிரிவினர்தான் இவற்றைப் படிக்க வேண்டும் 'பிறர் படிக்கக்கூடாது என்ற தவறுன விளக்கம்தர முற்படுகின்றனர். இது பகுத்தறிவிற்கு ஒவ்வாது. 'அதிகாரி பேதம்' அதாவது 'உண்மையை உணர உள்ள தகுதி வேறுபாடு' என்ற அடிப்படையில் பார்த்தாலும் மெய்ப்பொருள் நாட்டம் எவரிடம் உள்ளதோ அத்தனை பேரும் இந்தக் கருத்துக்களைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவர். இதில் ஜாதி, மத, இன, மொழி வேறுபாடு எதுவும் கிடையாது. அர்ஜுனன் மனித குலத்தின பிரிதிநிதியாவான்

நண்பருக்கு நலம் பயப்பதைச் சொல்வது தனது கடமை என்பதை பகவான், 'அர்ஜுனு! நீ எனக்கு உற்ற நண்பன். ஆகையால் உனக்கு எது நன்மை அளிக்குமோ அதைச் சொல்கிறேன்' என்று சொல்கிறார். 'A friend in need is a friend indeed' என்ற நமக்கெல்லாம் நன்கு தெரிந்த ஒரு ஆங்கிலப் பழமொழியின் மொழிபெயாப்புப்போல இது தோன்றுகிறதல்லவா?

(தொடரும்)

உ
ஓம் சப்த விக்னேஸ்வராய நம:
"வேதோ நித்யம் அதீயதாம்"
"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்"

ஓம் சப்த விக்னேஸ்வராய நம:
ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் அம்மா ஓம் காமாக்ஷி நம:
ஓம் ஸ்ரீ சங்கர பகவத் பாதாயே நம:

இந்தக்கட்டத்தில் உள்ளதை 108 தடவை எழுதி (யாரும் எந்த மொழியிலும் எப்பொழுதும் எழுதலாம்.) அத்துடன் கூட ரூ. 7/- (ரூபாய் ஏழு மட்டும்) மணியார்டர் மூலம் (by M. O) கீழ்க்கண்ட முகவரியில் சமர்ப்பிக்கவும்

புனித பிரசாதமும், 'வேத ஒளி' படமும் அனுப்பப்படும்.

எல்லாம் நன்மைக்கே. எல்லாம் நல்லதே நடக்கும்!

அனுப்ப வேண்டிய முகவரி
B. R. மகாலிங்கம்,
D-16-A, உ. வே. சாமிநாத அய்யர் சாலை, பிளாக்-27. நெய்வேலி-607 803. தமிழ்நாடு

# இந்துமதம் - ஒரு விளக்கம்

தமிழ்நாட்டில் சமய வாழ்க்கையில் சைவமும் வைஷ்ணவமும் இரண்டு கண்களாக விளங்கி வருகின்றன. முன்னதை சைவ சித்தாந்தமும், பின்னதை ஆழ்வார்களின் பாசுரங்களும் தெற்றென விளக்குகின்றன. தேவாரமும் பிரபந்தமும் ஜீவகோடிகள் அனைத்தும் இறைவனின் அருள் பெற்று மோக்ஷம் அடைய வழியான பக்தியைப் பற்றி எடுத்தியம்புகின்றன.

வரலாற்று அறிஞர்கள் இந்திய நாட்டினரின் கலாசாரமே இந்து மதம் என்று கூறுவார்கள். அகிம்சையே பின் அன்பாக மலருகிறது. எனவே இந்து மதம் என்ற பெயர் அதனுடைய முக்கியமான கொள்கையை மேற்கொண்டது ஆகும். அதாவது இந்துமதம் என்பது அன்பு மதம் ஆகும். இனி இந்து என கூறப்படுபவன் யார்? பரமாத்மாவை அடைய ஜீவாத்மா பாடுபடுகிறது. ஓர் உயிர் ஒரு காரணத்தினால் வருந்துகிறது. எனவே துன்பத்தை நீக்க யார் ஒருவர் இடைவிடாமல் பாடுபட்டு வேலை செய்கிறாரோ அவரே இந்து ஆவார். அந்த எண்ணங்களைக் கொண்ட மக்களை உடையதே இந்து மதமாகும். ஆகவே தான் உலகில் உள்ள எல்லா மதங்களுக்கும் இந்து மதமே தாயகமாக, நாயகமாகத் திகழ்வதில் ஐயமில்லை. இந்து மதத்தால் விஞ்ஞானத்தாலும் உணர முடியாத மெய்ப்பொருளை தனது மெய்ஞ்ஞானத்தால் அறிய முடிகிறது.

இந்து மதம் பற்றி விளக்கிக் கூற வேதம், உபநிஷத்துக்கள், ஆகமம். தோத்திரம், சாத்திரம், புராணங்கள், இதிகாசங்கள், பாசுரங்கள் ஆக இது போன்று நிறைய உள்ளன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் போன்ற சித்தாந்தங்கள் அனைத்தும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், உண்மை இன்பம் பெறுதல், பேரின்பத்தை அடைதல் ஆகியவற்றையே வலியுறுத்துகின்றன.

இனி இந்து மதத்தின் பெருமையைச் சிறிது ஈண்டுக் காண்போம், உலகப் பொருட்களை எல்லாம் உள் நின்று இயங்கும் சக்தி ஒன்று உள்ளது என்பதை உணர்வதே மெய்யுணர்வு. இந்த மெய்யுணர்வினையே இறையுணர்வு என்று குறிப்பிடலாம்.

உணர்வினில் நின்ற ஒன்றை
உணர்ந்தேனே
(திருவாய்மொழி—8;8:4)

எனக்கூறுகிறார் நம்மாழ்வார்.

"அண்ட சராசரங்களுக்கும் ஆதாரமான பிரமம் அகவுணர்வாக உள்ளது"

எனத்தெளிவாக கூறுவது ஐத்ரேய உபநிடதம். ஆன்ம ஞானம் பற்றி இந்து மதம் கூறுவதென்ன?

அண்ட சராசரங்களையும் படைத்து ஆட்டும் அழிவில்லாத பரம்பொருள் தான் நமது உள்ளத்தில் ஒளிரும் ஆன்மாவாக இருக்கிறது. அந்த ஆன்மா என்றுமே அழிவில்லாதது என்ற உண்மையை ஞானிகள் உரைக்கின்றனர்.

எல்லையற்ற பரம்பொருள் நம் இதயத்தில் ஆன்மாவாக உள்ளது என்ற உண்மையை,

என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே
மன்னு சோதி நம் பால் வந்து
வைகவே !
[தேவாரம்-திருச்சேறை]

என்று கூறுகிறார் திருநாவுக்கரசர்.

இறைமையும் ஆன்மாவும் வேறல்ல என்பதை,

" உடம்பினை முன்னம் இழுக்கென்
றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள்
கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்
கொண்டான் என்று
உடம்பினை யானிருந்து
ஓம்புகின்றேனே "

என்று திருமந்திரம்(725) கூறுகிறது. அனைத்தையும் விட ஆன்மாவே அருமையுடையது இனிமையுடையதுஎன்கிறது உபநிடதம்.

திருநாவுக்கரசர், என்னைக் காட்டிலும் இனியவன் ஒருவன் உண்டு. அவனே ஈசன். இதை,

" என்னில் யாரும் எமக்கு இனியாரில்லை
என்னிலும் இனியான் ஒருவன் உளன்
என்னுளே உயிர்ப்பாய் புறம்
போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர்
ஈசனே "
(தேவாரம்-திரு இன்னம்பர்)

எனக் கூறுகிறார்.

தன்னைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற தாபத்தால் மனிதன் ஓர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொண்ட உண்மைதான் இந்த ஆன்ம ஞானம். மனிதன் ஒரு புரியாத புதிராகவே உள்ளான். எங்கிருந்து எப்பொழுது அவன் வந்தான்? தனது ஆன்மீக மலர்ச்சிக்காகவே இயற்கை மனிதனைப் படைத்தது போலும்!

திரு. எஸ். சுப்பிரமணியன்,
எம்.ஏ. பி.எட்.
சேலம்-6.

சிவனும் ஜீவனும்

ஜீவாத்மா, பரமாத்மா இரண்டுமே ஆன்மா என்றார்கள். இரண்டும்

" வினையேன் வினைதீர் மருந்தானாய்!
விண்ணோர் தலைவா கேசவா! "
(திருவாய்மொழி - 1-5-6)

என்று நம்மாழ்வார் பாடி 'வினைப் பயன் என்ற நோய் தீர்க்கும் மருந்து இறைமை ஒன்றே' என நமக்குப் போதிக்கின்றார்.

ஆத்திகமும் நாத்திகமும்

பகவத்கீதை 9வது அத்தியாயத்தில் 23 சுலோகத்தில் "முழு நம்பிக்கையுடன் யார் எந்த தெய்வத்தை வணங்கினாலும் அது என்னை வணங்குவதேயாகும்...." எனக் கூறுகிறது.

பூவில் மணம் எங்கும் பரவி இருப்பதைப் போன்று இறைமை எங்கும் நிறைந்து மேவுகிறது என்பதை மாணிக்கவாசகர்,

" பூவினுற்றம் போன்று உயர்ந்
தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
(திருவாசகம் - திருவண்டப்பகுதி)

என்று கூறுகிறார்.



ஸ்ரீ வைத்யநாதசுவாமி கோயில், மாதவ வளாகம் - ஸ்ரீவில்லிபுத்தூர்.

வேறல்ல என்ற உண்மையைத் திருமந்திரம் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

" சிவனெனச் சிவனென்ன வேறில்லை
சிவனார் சிவனாரை அறிகிலர்
சிவனார் சிவனாரை அறிந்த பின்
சிவனார் சிவனாயிட்டிருப்பரே "
[திருமந்திரம் 2017]

இதிலிருந்து பிரமத்தை உணர்ந்தவர்கள் பிரமமாகவே ஆகிவிடுகின்றனர் என்ற உண்மையைக் காணலாம்.

"இறைவனை நினையாதவர்கள் மகிழ்வோடு இருக்கின்றனர். இறைவனை எண்ணி ஏங்கி நிற்பவர்களுக்கு எத்தனையோ துயரங்கள் வருகின்றன! இது என்ன உலக வாழ்க்கை" என்று ஆச்சரியப்படுகின்றார் நம்மாழ்வார். இதையினையே,

" நண்ணாதார் முறுவலிப்ப
நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாராத்துயர் விளைக்கும்
இவை என்ன உலகியற்கை! "

எனவும்,

[திருவாய்மொழி 4-9-1]

பிறவி எனக்கு வேண்டாம் என்பதை தொண்டரடிப் பொடியாழ்வார்,

" பிணி பசி மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன்
அரங்கமா நகருளானே ! "
(திருமாலை-3)

எனவும் கூறுகின்றனர்.

ஒவ்வொரு வினைக்கும் பயன் உண்டு. யாவராலும் இதை மாற்ற முடியாது. எனவே இயற்கை நியதியை இறைமை என்ற இணையற்ற ஆற்றல்தான் மாற்ற முடியும்.

" செடியார் வினைகள்தீர் மருந்தே!
திருவேங்கடத்தெம் பெருமானே"
(திருவாய்மொழி 6-10-7)

நாத்திகம்

சடங்குகளே சமயம் என்று கூறுவார் சமயவாதிகளான ஆத்திகர்கள். சடங்குகளின் குறையைக் கூறி சமயங்களையே மறுக்கின்றனர் நாத்திகர்கள்!

சமயவாதிகள் எல்லோரும் தங்கள் மதங்களில்தான் இறைமை விளக்கம் இருக்கிறது என்று கூறி அலைவதைக் கண்டித்து மாணிக்கவாசகர், இவ்வாறு கூறுகிறார் :

சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்
(திருவாசகம் - போற்றித்
திருவகவல்)

ஆகவே,

" ஆத்தமானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தமும் பேறினார்
(திருவாசகம் - போற்றித்
திருவகவல்)

என்கிறார்.



வ

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொது மக்களுக்கோர் அரிய நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்த்ர சரஸ்வதி ஸ்வாமி**கள், திருமுருக கிருபானந்த வாரியார் மற்றும் பல மஹான்களால் ஸ்ரீ முகமும் **ஆசியும் பெற்று நவசக்தி** நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்.

| எண் | யந்த்ரங்களின் பெயரும் அதன் பலனும் | விலை ரூ விபரம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் $4\frac{1}{2} \times 4\frac{1}{2}$ cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 350/= |
| 2. | ஸ்ரீ மஹா கணபதி 8 × 8 cm. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130/= |
| 3. | ஸ்ரீ மஹா லக்ஷ்மி மஹா யந்த்ரம் 24 × 24 cm. 300 ஆண்டுகளுக்கு லக்ஷ்மி கடாக்ஷத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1100/= |
| 4. | ஸ்ரீ சக்கரம் 8 × 8 cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 130/= |
| 5. | சர்வ ஜன மன, தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீ மஹா சுதர்ஸனம் 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத்தில் விருத்தி அடையவும், லக்ஷ்மி கடாக்ஷம் பணவரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபீட்க்ஷத்தை உண்டு பண்ணும். | 1650/= |
| 6. | சர்வ ஜன மன தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீ சுதர்ஸனம், 8 × 24 cm. மேற்கண்ட பலனைத் தரவல்லது. | 450/= |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா, 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத் தலத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும், பில்லி, சூன்யம், ஏவல்களை நீக்கி லக்ஷ்மி கடாக்ஷம் தரவல்லது | 1650/= |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா 8 × 24 cm. மேற்கண்ட பலன் தரவல்லது | 450/= |
| 9. | ரசமணி ஒன்றின் விலை அளவின் படி ரூ.250/= ரூ.350/= ரூ.500/= மனதை ஒரு நிலைப்படுத்தி சர்வ கார்ய சித்தி தரவல்லது. சுகபோக பாக்கியங்களை தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம் மறுபுறம் சுதர்ஸன டாலர் கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது | 65/= |
| 11. | ஸ்ரீசக்கரம் ஒருபுறம் மறுபுறம் ஸ்ரீ காமாக்ஷி டாலர் அம்பாள் கடாக்ஷத்தை ஏற்படுத்தி சிரமங்களை நீக்க வல்லது. | 65/= |
| 12. | ஸ்ரீ காமாக்ஷி ஒரு புறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர் அம்பாள் கடாக்ஷமும் பொருள் வரவும் தரவல்லது. | 65/= |
| 13. | ஸ்ரீ காமாக்ஷி மாங்கல்ய பாக்ய டாலர். அம்பாள் கடாக்ஷமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்க வல்லது. | 65/= |
| 14. | விவாகப் ப்ராப்தி டாலர் தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும். | 65/= |
| 15. | ஸ்ரீ சக்கரம் லக்ஷ்மி பீஜம் டாலர் அம்பாள் கடாக்ஷத்தை நிலைத்திருக்க செய்யவல்லது | 65/= |
| 16. | கண் திருஷ்டி படம் வீட்டிலும் வியாபார தலத்திலும் வாகனங்களிலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களை தடுத்து காப்பாற்ற வல்லது. | 65/= |
| 17. | தத்தாத்ரேயர் யந்த்ரம் கண் திருஷ்டி பொறாமை துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி காப்பாற்ற வல்லது. 12 × 12 cm. | 150/= |
| 18. | இன்னும் பலவிதமான யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்த்ரங்களும் உள்ளன. டாலர்கள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டது. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிராம தேவதைகளுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ.105/= வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0.50 பைசா தபால் தலையுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பிக்கவும். காஞ்சிப் பரமாச்சாரியாள் அனுக்கிரகத்துடன் புவனேஸ்வரி அம்பாளின் திரு உருவப்படம் 30 × 20 (இஞ்ச்) விலை ரூ.15/= விற்பனைக்கு வந்துள்ளது. வியாபாரிகளுக்கு தனிச் சலுகை உண்டு. ஓவியர் K.R.V. சர்மா தீட்டியது. மேற்கண்ட யந்த்ரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிக்கையில் எழுத முடியும்.



## ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர் & தலைவர், நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு (ஸ்டேட் பேங்க் எதிரில்)
கோபாலபுரம் - சென்னை 600 086
கடை போன் - 472013
மாமேரு டிரஸ்டு வீடு - 861254

"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"

" நுணுக்கரிய நுண்ணுணர்வு "
" தெரி வரிதாகிய தெளிவு "
" உன்னர்க் கரியது" -(திருவாசகம்)
என்றெல்லாம் இறைமைப் போற்றப் படுகிறது.

### விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும்

அறிவு, உணர்வு இரண்டும் மனிதனின் தனித்தனியான பண்புகளாகும். அறிவுக்கு அப்பாற்பட்டது என்று ஏதும் இல்லை. உணர்ந்து கொள்ள வேண்டியவற்றை நம் அறிவுகொண்டு அறிந்து கொள்ள முடியாது. நாம் அறிந்து கொள்ளவேண்டியவற்றை நாம் உணர்ந்து கொள்ளுதல் இயலாது. ஆதலால் உணர்வாகவுள்ள இறைமையினை இன்னதுதான் என்று அறிவு கொண்டு ஆராய முயலுதல் வீணேயாகும். எனவே மெய்ஞ்ஞானத்தினை விஞ்ஞானக் கண் கொண்டு ஆராய்ச்சி செய்ய இறங்குவதோ மெய்ஞ்ஞானத்திற்கு விஞ்ஞான அடிப்படையில் விளக்கம் கூற முற்படுவதோ தகாத முயற்சியாகும்.

இதனல்தான்,

" சோதித்தார் காணமை நின்றுர்
போற்றி "
(திருநாவுக்கரசர்-தேவாரம்-
திருக்கையிலாயம்)

என்றும்,

" ஆராயப்பட்டறியார் கண்டீர்,
அரவணை மேல்
பேராயற் காட்பாட்டார் பேர் "
(பொய்கையாழ்வார்-இயற்பா
முதல் திருவந்தாதி-55)

என்றும் இறைவனைப் புகழ்கின்றனர் அடியார்கள். எனவே விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும் வேறு வேருக இருக்கின்றன. இருந்தாலும் அவை ஒன்றுக் கொன்று முரண்பட்டவை அல்ல. "எப்படி" எனக் கூறுவது விஞ்ஞானம், "ஏன்" எனக்கூறுவது மெய்ஞ்ஞானம். மழை எப்படிப் பெய்கிறது என்பதை விளக்கும் விஞ்ஞானம். அது ஏன் பெய்கிறது என்பதை விளக்குவதில்லை. எனவே சூரியனின் ஒளியை, சந்திரனின் தண்மையை, தீயின் வெம்மையை இறைமைஎன்று உணர்கின்றது ஆன்மவியல். விஞ்ஞானத்தால் காண முடியாத இந்த மூல காரணத்தை இறைமையாகக் காணுகின்றது மெய்ஞ்ஞானம். அதனுல்தான் திருநாவுக்கரசர்,

" காரணக் கலைஞானக் கடவுளே "

என தேவாரத்தில் கூறுகிருர். இதையே வள்ளுவர்,

எப்பொருள் எத்தன்மைத்தாயினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு

எனக் கூறுகிருர்

" ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு
தெய்வம் "
(திருமந்திரம்)

என்ற தத்துவம்-

" தத்துவம் எங்குண்டு தத்துவன்
அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவம்
அங்கில்லை "
(திருமந்திரம்-2817)

இதயத்து உணர்வாக இறைமை உள்ளது என்ற இந்த மெய்ஞ்ஞானத் தத்துவம் - விஞ்ஞானத்துக்கு மாறுபட்டதன்று.

ஆகவே கடவுளால் இந்து மதம் சீர் கெட்டு அழியாது சிறந்தோங்கி வளர்ந்து திகழுமாறு தொண்டு செய்வதற்காகவே மக்களிடையே பெரியதோர் விழிப்பையும், ஆர்வத்தையும், பக்தியையும் உண்டாக்க நவீனகாலத்தில் எழுந்தருளியுள்ள இலக்கியங்களையும், ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் இந்து சமய நூல்களையும் கற்றுணர்ந்து இறைவனின் திருவருள் பெறுவோமாக !

★



ஸ்ரீ வைகுண்டம் திருக்கோயில்



# தி. தி. தேவஸ்தானத்தாரின்
# அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி. தி. தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அரும்பொருட் காட்சியகங்கள்.

தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதிகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும் தி. தி. தேவஸ்தானத்தாரிடமும், மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியகத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இவ்வகத்தை அலங்கரிக்கின்றன.

மற்றொரு அரும்பொருட் காட்சியகம் (எஸ். வி. கோயிற்கலை காட்சியகம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி வடக்கு மாட வீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியகத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும், ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் ஏற்றப்பட்டு வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகாணஸம், பஞ்சராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத் திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப் பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திடல் வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையான ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதிகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பரிவில் விளக்கப்படுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் வலியுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட்டுள்ளது. நாட்டியக் கலையின் சிறப்பும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. மேலும் கி. பி 8-ஆம் நூற்றாண்டு காலத்திலிருந்து நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம் பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக் கூறும்.

**அனுமதி நேரம் :** காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை
**அனுமதிக் கட்டணம் :** பெரியோர்: ரூ. 1/- சிறுர்: 0-50

பொறுப்பாளர்,
**எஸ். வி. அரும்பொருட் காட்சியகம்**
**தி. தி. தே. திருப்பதி.**

ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் ஓர் இலட்சியம்—குறிக்கோள் தேவை. இலட்சியம்தான் மனிதனை உயர்வடையச் செய்கிறது. இலட்சியம் உண்டாவதற்கு ஆசையே அடிப்படை. ஆசையின் முதிர்ச்சியே இலட்சியமாக—குறிக்கோளாக உருவாகிறது. ஆனால் பௌத்த சமயம் 'ஆசையே துன்பங்களுக்கெல்லாம் காரணம்' என்று சொல்லுகிறதே எனச் சிலர் கேட்கலாம். 'ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள், ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்' என நமது இந்து சமயப் பெரியோர்கள்கூடக் கூறியிருக்கிறார்களே எனச் சிலர் நினைக்கலாம். அப்படியானால் எல்லாவித ஆசைகளையும் நாம் விட்டு விட வேண்டியதுதானா? ஆசை இல்லாவிட்டால் இலட்சியம் எவ்வாறு தோன்ற முடியும்? இலட்சியமில்லாத வாழ்க்கை மனம் போன போக்கெல்லாம் சென்று வீணாகிப் போய்விடுமல்லவா? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த தெய்வப் புலவர் திருவள்ளுவர் சிந்தித்தார். துறவு என்னும் அதிகாரத்தில் இந்த வினாக்களுக்கெல்லாம் விடை காட்டுகிறார். 'ஆசையை ஒழிப்பதற்குக் கடவுள்மீது ஆசை வை' என்று நமக்குக் கட்டளையிடுவது போலச் சொல்லுகிறார்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

என்பது அவர்கூறிய குறட்பா. 'துன்பம் தரும் ஆசைகளை நீக்க வேண்டும்; நல்ல ஆசைகளை வளர்க்க வேண்டும்' என்பதுதான் இப்பாடலின் உட்கருத்து. நல்ல ஆசைகள் சிறந்த குறிக்கோள்களாக உருவெடுத்து உயர்ந்த நன்மையைச் செய்யும் என்பது திருவள்ளுவர் உள்ளம்.

பள்ளியில் படிக்கும் குழந்தைகள் சிலரைத் தனித்தனியே சந்தித்து 'நீ எதற்காகப் படிக்கிறாய்?' என்று கேட்டுப் பாருங்கள். 'நான் எதிர்காலத்தில் டாக்டர் ஆவேன்' என்று ஒரு குழந்தை சொல்லும். 'நான் என்ஜீனியர் ஆவேன்' என்று மற்றொரு குழந்தை சொல்லும். 'நான் விஞ்ஞானியாக ஆவேன்' என்று வேறொரு குழந்தை சொல்லும். 'நான் கணித மேதை ஆக வேண்டும்' என்று இன்னொரு குழந்தை சொல்லும். ஆனால் எந்தக் குழந்தையும் 'நான் சும்மா பொழுது போகாமல் படிக்கிறேன்' என்று சொல்லுவதில்லை. எனவே படிக்கும் குழந்தைகளிடத்திலே இளம் வயதிலேயே ஆசைகள் இருக்கின்றன. அக்குழந்தைகள் வளர வளர, அந்த ஆசைகளும் வளர்ந்து இலட்சியங்களாக—குறிக்கோள்களாக மாறுகின்றன. அப்போது அவர்கள் கடுமையாக உழைக்கிறார்கள். அவர்களது குறிக்கோள்கள் நிறைவேறுகின்றன.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்
திண்ணியர் ஆகப் பெறின்.

என்பது பொய்யாமொழி அல்லவா?

நம் தேசத் தந்தை மகாத்மா காந்தியின் காலத்தில் பாரத நாடு ஆங்கிலேயர் வசம் சிக்கி அடிமைப் பட்டுக் கிடந்தது. நம் நாட்டு மக்கள் உரிமையிழந்து; பெருமை இழந்து உற்ற துன்பங்கள் பலப்பல. அவற்றையெல்லாம் கண்ட காந்தி, நமது நாடு முன்போல் சுதந்தர நாடாகத் திகழ வேண்டும் என்று ஆசைப்பட்டார். அந்த ஆசையே, பின் நாளில் ஆங்கிலேயர் சிறுசிறு சலுகைகளை வழங்க முற்பட்ட போது 'முழுமையான சுதந்தரமே நமது குறிக்கோள்' என அவரை முழங்கச் செய்தது. அகிம்சை, சத்தியாக்கிரகம் ஆகியவற்றின் துணைகொண்டு தமது குறிக்கோளில் அவர் உறுதியாக இருந்தார். அதனால் இந்திய நாடு பூரண சுதந்தரம் அடைந்தது. எனவே மகாத்மா காந்தியின் சுதந்தர வேட்கை, ஓர் இலட்சிய வெறியாக மாறியபோது நமது நாடு பூரண சுதந்தர நாடாக ஆயிற்று.

புலவர். பெ. கிருஷ்ணராஜன், M.A., M.Ed.,
சேலம்-6.

# வேள்வியில் வைத்த அவியுணவு

தமிழ் நாட்டில் சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய ஒரு பெண் தன் உள்ளத்தில் ஓர் ஆசையை வளர்த்தாள். ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஒரு நந்தவனத்தில் இருந்த துளசிச் செடி ஒன்றின் கீழே அவள் ஒரு குழந்தையாகத் தோன்றினாள். வடபெருங்கோயில் இறைவனுக்கு அணிவிக்கும் மலர் மாலைக்காக அமைக்கப்பட்ட அழகிய நந்தவனம் அது. மலர் பறிப்பதற்காகச் சென்ற பெரியாழ்வார், அப்பெண் குழந்தையைக் கண்டார். பூமிப்பிராட்டியின் அம்சமாகக் காட்சியளித்த அக்குழந்தையைப் பார்த்துப் பெரு மகிழ்ச்சி கொண்டார். அன்புடன் அதனை எடுத்து வந்து தம் மகளாகப் பாவித்துக் கோதை என்று பெயர் சூட்டி வளர்த்து வந்தார். பின் நாளில் பக்தி உலகம் ஆண்டாள் என்று அவளைக் கொண்டாடியது.

திருமால் அடியார்களாகச் சிறப்பித்துக் கூறப்படுபவர்கள் ஆழ்வார்கள் எனப்படுவர். அவர்கள் பன்னிருவர். இவருள் ஆடவராகிய ஆ

வார்கள் பதினொருவர். பெண் ஆழ்வார் ஆண்டாள் ஒருவரே. பரமனிடம் பக்தி மிகுந்து அவரை அடைய வேண்டும் என்னும் எண்ணத்தோடு நாயகி பாவனையால் பாமாலை சூட்டிய ஆழ்வார்கள் பலர்.

தாமரைபோல் கண்ணனை
எண்ணருஞ்சீர்
பேராயிரமும் பிதற்றி-பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊரா தொழியேன்
நான்
வாரார்பூம் பெண்ணை மடல்.
*(சிறிய திருமடல்)*

இது, திருமங்கை ஆழ்வார் கொண்ட காதல். இவர் தம்மை ஒரு பெண்ணாகக் கற்பனை செய்து கொள்கிறார். பெண்கள் மடலேறக் கூடாது என்பது உலக நியதியாக இருந்தாலும் அரங்கனை அடைவதற்கு நான் மடலேறியே தீருவேன் என்று பாடினார். இவ்வாறே, நம்மாழ்வாரும் தம்மை நாயகி நிலையில் நிறுத்தி, தாமரைக் கண்ணனாகிய இறைவனிடம் தான் கொண்ட காதலைத் தன் தோழியிடம் சொல்லுவதுபோல,

என்செய்யும் ஊரவர் கவ்வை
தோழீ! இனிநம்மை?
என்செய்ய தாமரைக் கண்ணன்
என்னை நிறைகொண்டான்!
முன்செய்ய மாமையிழந்து
மேனி மெலிவெய்தி
என்செய்ய வாயும்கருங்கண்
ணும்பசப் பூர்ந்தனவே!
(திருவாய்மொழி 5-2 பா.)

என்று கூறுகிறார். இவர்கள் இவ்வாறு நாயகி நிலையில் நிறுத்திப் பாடியதெல்லாம் பரமபதநாதனின் அருளைப் பெறுவதற்கே. ஆனால் தானே அப்பரமனுக்கு நாயகியாக வேண்டும் என்னும் ஆசையை உள்ளத்தில் விதைத்து, சிறிது சிறிதாக அதனை வளர்த்து அவரைத் தம் நாயகராக அடைந்த பெருமை ஆண்டாளுக்கே உண்டு.

மலர்வனத்திலிருந்து எடுத்துவந்த குழந்தை பெரியாழ்வாரைப்போலவே பெருமானிடம் பக்தி மிகுந்து விளங்கியது. கோதை வளர வளர இறை அறிவும் அவள் உள்ளத்தில் வளர்ந்தது. மங்கைப் பருவம் எய்திய கோதை மாதவனிடத்தில் மாறாத காதல் கொண்டாள். தந்தையாகிய பெரியாழ்வாரிடத்தில், 'நூற்றெட்டுத் திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமானது பெருமைகளை எடுத்துக் கூறியருள வேண்டும்' என வேண்டினாள். தம் அன்பு மகளின் வேண்டுகோளுக்கு ஏற்ப, அவரும் ஒவ்வொரு தலத்திலும் உள்ள இறைவன் பெருமைகளை விரித்துக் கூறினார். அங்ஙனம் அவர் கூறிவந்த போது, வட மதுரையில் உள்ள கண்ணனது வரலாற்றைக் கேட்டவுடன் மயிர் சிலிர்ப்பு அடைந்தாள். திருவேங்கடத்துப் பெருமானின் திவ்விய வரலாற்றைச் செவி மடுத்தபோது முக மலர்ச்சி உற்றாள். திருமாலிருஞ்சோலை மலையழகரின் வடிவழகை அறிந்தபோது மனமகிழ்ச்சி கொண்டாள். திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி, திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் அரங்கப் பெருமானின் பெருமையைச் செவிமடுத்த அளவில் அளவற்ற இன்பம் அடைந்தாள். அவர்களுள், அரங்கப் பெருமானிடத்தே மனத்தை வைத்து, அவருக்கே தன்னை மணமகளாக நிச்சயித்துக் கொண்டாள்.

பெரியாழ்வார், நந்தவனத்திலிருந்து நாள்தோறும் மலர்களைப் பறித்து வந்து மாலை தொடுத்து வடபெருங் கோயில் இறைவனுக்கு எடுத்துச் சென்று அலங்கரித்து வணங்கி வருவது வழக்கம். இறைவனுக்கு மலர் மாலை கட்டி வைத்து விட்டுப் பிற பொருள்களைச் சேகரித்து வருவதற்காகப் பெரியாழ்வார் வெளியில் சென்றிருக்கும் காலத்தே, ஆண்டாள் அம்மலர் மாலையைத் தன் கழுத்தில் அணிந்து கொண்டு அப்பெருமானுக்கு 'நான் நேரொத்திருக்கிறேனா' எனச் சிந்திப்பது உண்டு. மாலை சூட்டிக் கொள்ளுவதோடு பட்டாடைகளை உடுத்தியும் உயர்ந்த அணிகலன்களை அணிந்தும் தன்னை அலங்கரித்துக் கொண்டு, தன் அழகை நிலைக்கண்ணாடி முன் நின்று பார்த்து மகிழ்வாள். பிறகு தந்தையார் வருவதற்கு முன் மலர் மாலையைக் கழற்றி முன்போலவே பூக்குடலையுள் வைத்து விடுவாள். இதனை அறியாத ஆழ்வார் அம்மலர் மாலையை எடுத்துச் சென்று இறைவனுக்கு அணிவித்து வணங்குவார். பெருமானும் அதனை விருப்புடன் ஏற்றருளினார்.

இவ்வாறு நாட்கள் பல சென்றன. ஒரு நாள் வெளியிற் சென்ற பெரியாழ்வார் விரைவில் வீடு திரும்பி விட்டார். நிலைக் கண்ணாடி முன் ஆண்டாள் நின்றிருந்த கோலம் அவரைத் திடுக்கிட வைத்தது. இறைவனுக்குரிய மாலையை இவள் சூட்டிக் கொண்டிருக்கிறாளே என்று கோபம் கொண்டு அவளைக் கடிந்து பேசினார். மானிடர் அணிந்த மாலை மாலவனுக்கு ஆகாது என்று எண்ணி, அன்று கோவிலுக்கு மாலை கொண்டு செல்லாமல் மனம் வருந்தி இருந்தார். அன்று இரவு வடபெருங் கோயில் இறைவன் ஆழ்வாரது கனவில் தோன்றி, 'உன் மகள் சூடிக் கொடுத்த மாலையே எமக்கு உகப்பானது. ஆகவே இனி அத்தகைய மாலையையே எமக்குக் கொண்டு வருக' என்று அருளிச் செய்தார். உறக்கம் நீங்கி எழுந்த ஆழ்வார் தம் மகளின் பெருமையை உணர்ந்தார். அவள் மலர் மங்கையின் அவதாரம் எனத் தெளிந்தார். இறைவனது மாலைக்குரிய மலர்கள் விளையும் நந்தவனத்துள் கிடைத்ததால் கோதை (கோதை-மலர் மாலை) என்றும், மலர் மாலையைத் தான் சூடிப் பார்த்த பிறகு இறைவனுக்குக் கொடுத்தனுப்பியமையால் சூடிக்கொடுத்த சுடர்க் கொடி என்றும், இறைவனுக்கு உரிமையாகும் வகையில் அவருள்ளத்தை ஆட்கொண்டமையால் ஆண்டாள் என்றும் பல அழகிய பெயர்கள் அவளுக்கு உண்டாயின.

ஆண்டாள் திருமணப் பருவத்தை அடைந்தாள். அவளுடைய மனம் அரங்கனிடத்திலேயே அடிமைப் பட்டுக் கிடந்தது. அவனையே தன் மணாளனாக அவள் நிச்சயித்துக்கொண் டாள். 'பாவை நோன்பு' இருப்பவர்கள் தாம் விரும்பும் கணவனை அடைவார்கள் என்று அவள் கேள்விப் பட்டிருக்கிறாள். எப்போது பாவை நோன்பு இருப்பது என்று அவள் யோசிக்கிறாள். 'மாதங்களில் நான் மார்கழி' என்று பகவத் கீதையில் கண்ணன் சொல்லியிருப்பது அவள் நினைவிற்கு வருகிறது. கண்ணனை அடைவதுதானே அவளது இலட்சியம். எனவே கண்ணனுக்கு ஏற்ற மார்கழி மாதத்தில் நோன்பு நோற்கிறாள். மார்கழி மாதம் முப்பது நாளும் திருப்பாவைப் பாடல்களைப் பாடி நோன்பு இருக்கிறாள். கண்ணனோடு உறவு அவளுக்குக் கைகூடவில்லை. காதலர்களை ஒன்று சேர்க்கும் காமவேள் விரதம் மேற்கொள்கிறாள். அவனும் ஆண்டாளின் துயரத்தைக் களைவதாகத் தெரியவில்லை.

மகளது மனநிலையை ஆழ்வார் உணரவில்லை. அவளுக்குத் திருமணம் செய்விப்பதற்குரிய செயலில் ஈடுபட்டார். மங்கைக்குரிய மணாளனைத் தம் ஊரிலும் வெளியூரிலும் தேடும் முயற்சியில் இறங்கினார். தம் உறவிலாவது அயலிலாவது நல்ல மாப்பிள்ளையைத் தேடிக் கொண்டிருந்தார். இச்செய்தி ஆண்டாளுக்குத் தெரிந்துவிட்டது.

" இந்திரன் உள்ளிட்ட தேவர் குழா
மெல்லாம்
வந்திருந்து என்னை மகட்பேசி
மந்திரித்து
மந்திரக் கோடி உடுத்தி மணமாலை
அந்திரி சூட்...'டுவான்.

என்று நாராயணனை எதிர்பார்த்து நிற்கும் நங்கை, சாதாரண மானிடனுக்கா மனைவி ஆவாள்? தான் சூடிக் கொடுத்த மாலையை உகந்த சுடராழி வெண் சங்கு மாலவனுக்குரிய மங்கை, மனிதப் பிறவியானுக்கா மனைவியாக நினைப்பாள்?

தந்தையின் செயல் ஆண்டாளுக்கு ஆறாத்துயரம் அளித்தது. அத்துயரம் கோபமாகவும் மாறியது. ஆனால் தன்னை வளர்த்து, கண்ணின் இமை போல் தன்னைக் காத்து, தன் நலனில் அக்கறை கொண்டு விளங்கும் தந்தை யாரிடத்தே எப்படிக் கோபம் கொள்வது? எளியவர் கோபம் வலியவர்மீது செல்லுமோ? அப்படியானால் கோபம் கொண்டவர் தம் கோபத்தை எவ்வாறு தணித்துக் கொள்கின்றனர்? ஒரு குடும்பத்தில் கணவன் மனைவி இருவரிடத்தே சிறு சச்சரவு தோன்றுகிறது. மனைவி தன் கணவனிடம் கோபம் கொள்கிறாள். ஆனால் அந்தக் கோபம் அங்கே பயன்படாது என்பது அவளுக்குத் தெரியும். அதனால் தன் கோபத்தை வீட்டுப் பாத்திரங்களிடத்தே காட்டுகிறாள். பாத்திரங்கள் சில உருள்கின்றன; சில உடைகின்றன. அதுபோலத்தான் ஆண்டாளின் கோபமும் அவள் தந்தையிடம் செல்லவில்லை. அதற்கு மாறாக, காதலர்களை ஒன்று சேர்க்க வேண்டிய மன்மதன் தன் கடமை தவறிவிட்டான் என்று அவனை வெறுக்கிறாள். வேங்கடவற்கு என்னை விதி என்று விரதமிருந்தும் அவரோடு தன்னைச் சேர்த்து வைக்காத மன்மதன்மீது கோபம் கொள்ளுகிறாள். அந்தக் கோபம் மன்மதனைப் பார்த்துச் சபதம் செய்யவும் வைக்கிறது.

'மன்மதனே! சக்கரபாணியோடு என்னை நீ சேர்த்து வைக்கவில்லை என்பதற்காக நான் சாதாரண மனிதனுக்கு மனைவி ஆகிவிட மாட்டேன். யாகம் செய்யும் மறையவர்கள் தேவர்களுக்கு அவிஉணவு (புனித உணவு) படைப்பார்கள். அந்த உணவு தேவர்களுக்கே உரிமை உடையது. காட்டிலே வசிக்கின்ற இழிந்த நரி அந்த உணவை மோப்பம் பிடிக்கும்படி யாரும் விட்டுவிட மாட்டார்கள். என் உடலும் அது போன்றதே. சங்கு சக்கரமுடைய உத்தமர்க்கென்றே வளர்ந்தது இவ்வுடம்பு. இதனை மானிடர்க்குச் சொந்தமாக்குவது என்ற பேச்சுக்கே இடமில்லை. அத்தகைய பேச்சு எழுமானால் நான் உயிர் வாழ மாட்டேன்.

வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும்
செய்வதொப்ப
ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்த என்தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்
மதனே!
(நாச்சியார் திருமொழி,

என்று ஆண்டாள் தன் மனஉறுதியை மன்மதனிடம் எடுத்துரைக்கிறாள். மானிடர்க்குத் தன்னை மணம் முடித்து வைக்க நினைப்பது, அவியுணவைக் காட்டுநரி மோப்பம் பிடிக்க விடுவது போல ஆகும் என்ற அழகான உவமையின் மூலம், அவியுணவை நரி மோப்பம் பிடித்தல் என்பது நடவாதது போல அரங்கப்பெருமானுக்குரிய தானும் மானிடர்க்கு உரிமையாதல் என்பது இல்லை என்பதை உறுதிப் படுத்துகிறாள்.

இளம் பருவத்தில் அரங்கப் பெருமானிடத்து ஆசை வைத்த ஆண்டாளின் திருவுள்ளம், மங்கைப் பருவத்தில் அந்த ஆசையை வளர்த்து அப்பெருமானுக்குரிய மாலையைத் தான் சூட்டி அழகு பார்த்தது. மணப் பருவத்தில், அப்பெருமானையே தன் கணவராக அடையும் இலட்சியம் அந்த உள்ளத்தில் முதிர்ந்தது. ஆண்டாள் பாடிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்னும் இரண்டு நூல்களும் அவளது உள்ளத்தை நன்கு புலப்படுத்தும். ஆண்டாள் தன் இலட்சியத்தில் வெற்றி பெறுகிறாள். அரங்கனையே தன் நாதனாக அடைகிறாள்.

கவிச் சக்கரவர்த்தி கம்பர் பல நூல்களைக் கற்று உணர்ந்தவர். ஆண்டாள் பாடிய'வானிடை வாழும் அவ் வானவர்க்கு...' என்னும் பாடல் கவிச் சக்கரவர்த்தியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது போலும்! ஏனெனில் கம்பர் ஆண்டாளுக்குப் பிற்காலத்தவர். வால்மீகி இராமாயணத்தைக் கற்போர் களிக்குமாறு தமிழில் ஆக்க முற்பட்ட கம்பர், தாம் அறிந்த நூல்களில் காணப் பட்ட சிறந்த கருத்துக்களையெல்லாம் தம் நூலில் சேர்த்துக் கொண்டவர். 'சிந்தாமணிக் கடலில் சிறிது மொண்டு கொண்டேன்' என்று அவரே கூறிய தாகச் சொல்லப்படுவதும் உண்டு. அங்கங்கே கலைகள் தேரும் அறிவன் போல் பல அழகிய கருத்துக்களைத் தேடிப் புறப்பட்ட கம்பருக்கு 'நாச்சியார் திருமொழி'யும் கிடைத்திருக்கக் கூடும். உயர்ந்தவர் ஒருவருக்கு உரிமையான பெண், இழிந்தவர்க்கு உரிமையாதல் இல்லை என்பதை விளக்கும் 'வேள்வியில் வகுத்த அவியை நரி புகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப' என்னும் உவமை கம்ப நாட்டாழ்வாரின் உள்ளத்தைக் கவ்விப் பிடித்தது. இந்த உவமையைத் தமது இராமாயண நூலில் எந்த இடத்திலாவது பயன் படுத்த வேண்டும் என்று எண்ணிய படியே இருந்தார்.

இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லத் திட்டமிட்டு, மாரீசனை மாய மானாக அனுப்பி வைக்கிறான். அதன் காரணமாக இராமனும் இலட்சுமணனும் சீதையைப் பிரிகிறார்கள். அப்போது இராவணன் ஒரு முனிவர் போல வந்து சீதையிடம் காமப் பேச்சுக்களைப் பேசுகிறான். 'என் தலைகள் தோறும் மகுடம் போல உன்னை வைத்திருப்பேன். தேவ மாதர்களை உன் பொன்னடிக்கு ஏவல் செய்ய வைப்பேன். பதினான்கு உலகங்களையும் ஆளும் உயர்ந்த செல்வத்தை உனக்கே சொந்தமாக்குவேன். நீ என்னிடம் வந்துவிடு' என்று ஏதேதோ பிதற்றுகிறான். சீதையோ இராவணனது சொற்களைக் கேட்டு அருவெறுப்பு அடைகிறாள். அவனை எதிர்த்துப் பேசுகிறாள். ஆரண்ய காண்டத்தில் இது ஒரு காட்சி.

இந்த இடத்தில் கம்பருக்கு, ஆண்டாள் கூறிய உவமை நினைவுக்கு வருகிறது. அதனைச் சீதை கூறுவது போல அமைத்துத் தமது ஆசையைத் தீர்த்துக் கொள்ளுகிறார். இராவணன் கூறிய காமச் சொற்களைக் கேட்ட சீதை தன் இரு செவிகளையும் கைகளால் பொத்திக் கொள்கிறாள். இராவணனைப் பார்த்து, "வெற்றி வில்லைக் கையிற் கொண்ட காகுத்தனின் கற்பு மனைவியாகிய என்னை, எரி வளர்த்துச் செய்யும் வேள்வியில் மறையவர் படைத்த அவியுணவை நாய் விரும்பியது போல விருப்பம் கொண்டு தகாத வார்த்தைகளைப் பேசினாய்" என்று செய்யுளை அமைக்கிறார்.

செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்
கவினும் வெஞ்சிலைக்கை வென்றிக் காகுத்தன் கற்பினேனை
புவியிடை ஒழுக்கம் நோக்காப் பொங்கு எரி புனிதர்ஈயும்
அவியைநாய் வேட்டதென்ன, என் சொனாய் அரக்க என்றாள்.

(ஆரண்ய காண்டம்)

என்பது அப்பாடல் மணிவண்ணனுக்குரிய ஆண்டாளைச் சாதாரண மானிடர்க்கு உரிமையாக்க நினைப்பது, வேள்வியில் வைத்த அவியுணவை நரி மோப்பம் பிடிப்பது போல ஆகும் என்று நாச்சியார் திருமொழியில் சொல்லப்பட்டது. அதனையே இராமாயணத்தில், இராமபிரானுக்குரிய சீதையை அரக்கன் இராவணன் இச்சிப்பது, வேள்வியில் வைத்த அவியுணவை நாய் விரும்புவது போல ஆகும் என்று கம்பர் தம் கதைக்கு ஏற்பப் பாடியுள்ளார். ஆண்டாள் தன் பாடலில் மானிடரை நரி என்று கூறுகிறாள். கம்பர் தமது செய்யுளில் அரக்கனை நாய் என்று சொல்லுகிறார். இந்தச் சிறு வேறுபாட்டினைத் தவிர, ஆண்டாள் சொன்ன உவமையைக் கம்பர் அப்படியே தம் காவியத்தில் பதித்து விடுகிறார்.

ஆண்டாள் துளசிச் செடியின் அடியில் பூமியிலிருந்து கண்டெடுக்கப் பட்டவள். அவ்வாறே சீதாபிராட்டியும் யாக பூமியிலிருந்து சனகனால் கண்டெடுக்கப்பட்டவள். ஆண்டாள் அரங்கப் பெருமானுக்கு உரியவள். சீதை இராமபிரானுக்குச் சொந்தமானவள். இருவரும் எம்பெருமானுக்கே உரியவர்கள். எனவே ஆண்டாள் தன்னை வேள்வியில் வைத்த அவியுணவு (தேவர் உணவு) என்று குறிப்பிடுவது போல, சீதையையும் வேள்வியில் வைத்த அவியுணவு என்று கூறுவதே பொருத்தமாகும் என்று எண்ணிக் கம்பர் பாடியிருப்பது நினைந்து நினைந்து இன்புறத் தக்கதாகும்.



# மனத்தை ஒருமுகப்படுத்த பிராணயாமம்

செல்லம் கொடுத்து சிறுவர்களை வளர்த்தால் அவர்களது வாழ்வு கெட்டு விடுவது போல் மனதையும் நம்மில் பலர் கெடுத்து விடுகின்றனர். மனம் விரும்பியதை யெல்லாம் செய்யும்படி நாம் அதற்கு இணக்கம் கொடுத்து வருகிறோம். விளைவு, மனம் எப்போதும் சஞ்சலம், அமைதியின்மை ஆகியவற்றில் உழல்கிறது.

இப்படிப்பட்ட மனதை சுவாமி விவேகானந்தர் அழகாகச் சித்தரிக்கிறார். மனதை பைத்தியம் பிடித்த குரங்குக்கு ஒப்பாகக் கூறுகிறார். "அமைதியற்று உழன்று கிடப்பது குரங்கின் செயல். அதிகமாக கள் குடித்த குரங்கு ஒன்று இருந்தது. போதாதற்குத் தேள் ஒன்று அக் குரங்கைக் கொட்டிவிட்டது. அதனால் என்றும் இருப்பதை விட அதிகமாக துள்ளிக் குதித்தது. இந்த பரிதாப மான நிலையை மேலும் பாழ் பண்ணுவதற்கு பிசாசு ஒன்று அதனுள் புகுந்து கொண்டது. இப்போது அதன் அடக்கமுடியாத நிலைகுலைவை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. மானுட மனதும் அக்குரங்கிற்கு நிகரானது. இயற்கையிலே நில்லாமல் அது இயங்கிக் கொண்டு இருக்கும். அம்மனத்தினுள் ஆசை யென்னும் கள் புகுந்துள்ளது. அவ்வாசையில் முற்றிலும் வசப்பட்டிருக்கும் மனதைப் பிறருடைய வெற்றியைப் பற்றிய பொறாமையானது தேள் கொட்டுவதுபோன்று கொட்டிவிட்டது. இறுதியாகத் தற்பெருமை என்னும் பிசாசு அம்மனத்தினுள் புகுந்துகொண்டது. எல்லாச் சிறப்பும் தனக்கே என்று கர்வம் கொள்ளச் செய்கிறது. இவ்வகைப்பட்ட மனதை அடக்குவது எவ்வாறு இயலும்" என்று விவரிக்கிறார்.

இவ்வகைப்பட்ட மனத்தின் எண்ண அலைகளை நம் முன்னோர்கள் பிராணயாமத்தின் மூலம் அடக்கலாம் என்று வழி சொல்லித் தந்துள்ளார்கள். தியானத்தால் மனதை ஒருமுகப்படுத்தலாம் என்ற முறையை எடுத்துச் சொல்கிறார்கள்.

முறையான பிராணயாமத்தால் பிரம்மத்தை உணரலாம் என்று ஸ்ரீபகவத் கீதையில் கீதாச்சாரியன் உபதேசிக்கிறார். பிராணயாமத்தில் பலவகை இருப்பினும் ஸந்த்யாவந்தனத்தில் சொல்லியுள்ள முறையே ஏற்புடையதாக எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. இடது நாசி வழியாக (இடகலை) காற்றைக்கொஞ்சம் இழுத்து 'கும்பகம்' என்றஅமைப்பில் நெஞ்சில் காற்றை நிறுத்தி வலது நாசி வழியாக (பின்கலை) மெதுவாக காற்றை வெளிவிடுவது பிராணயாமம். இதே போல் வலது நாசி வழியாகக்காற்றைஇழுத்து,நிறுத்திப் பின் இடது நாசி வழியாக காற்றை மெதுவாக வெளியிட வேண்டும். பிராணயாமம் செய்யும் போது அமர்ந்த நிலையில் கண்ணை மூடியவண்ணம் இழுக்க வேண்டும். சாய்ந்தோ அல்லது குறுகலாகவோ இல்லாமல் நிமிர்ந்து அமர்ந்திருக்க வேண்டும் என்பது முக்கியமான கோட்பாடு. காற்றை இழுப்பது அரை நிமிஷம் என்றால் காற்றை நெஞ்சில் நிறுத்துவது ஒரு நிமிடமும், காற்றை வெளி விடுவது ஒன்னரை நிமிஷம் என்ற விகிதத்தில் பிராணயாமம் செய்வது முறையாகும். ஸந்த்யாவந்தன காலங்களில் பிராணயாமம் செய்யும் சமயங்களில் வெறுமனே மூக்கை மட்டும் தொட்டுக்கொண்டு மந்த்ரம் மட்டும் சொல்வது முழுமையாகாது. அதற்குண்டான உண்மையான பலனும் கிட்டாது.

பிராணயாமத்தால் அண்டத்தில் உள்ள அனைத்தையும் வசீகரிக்கலாம் என்றும் பிராணயாமத்தால் அஷ்டமா சித்திகளும் பெறலாம் என்றும் யோகசூத்திரங்கள் தெரிவிக்கின்றன. பிராணயாமம் மூலம் பிராணனை அடக்குவதால் மூலாதாரத்தில் இருந்து குண்டலினி சக்தி எழும்பி சுழிமுனை நாடியில் கூடி மகோன்னதமான சக்தி பிராபவம் ஏற்படு


திரு. சோ. ரங்கசுவாமி
நாட்டரசன்கோட்டை.


கிறது என்பது சித்தர் கூற்று. இந்த சுசூமுனை நாடி மூலாதாரத்திலிருந்து முதுகுத் தண்டத்தை ஒட்டி உட்புறமாக வந்து புருவத்திற்கு நடுவே வந்து சேருகிறது. எல்லோருக்குமே இந்த சுழுமுனை நாடி உள்ளது. ஆனால் சித்தர் போன்ற அருளார்கள் மட்டுமே இந்த நாடி மூலம் பயன்பெறுகின்றனர். ஏனையோர் இதனால் பயன் ஏதும் பெறுவதில்லை.

அண்டம் முழுவதும் 'ஓம்' என்னும் பிரணவ 'ஒலி' பூர்ணமாக வியாபித்துள்ளது. அமைதியான சிற்றோடை முதல் பேரிரைச்சல் கொண்ட கடல் அலைவரை ஏற்படுத்தும் சப்தத்தை கூர்ந்து கவனித்தால் இதன் உண்மை விளங்கும். இதனால்தான் நம் முன்னோர்கள் பிராணயாமத்தின் போது மனத்தில் உச்சரிக்கும் மந்த்ரமாக "ஓம் பூ :—ஓம் புவ : — 'ஓம் ஸுவ: ஓம் மஹ : — ஓம் ஜந : ஓம் தப : ஓம் ஸத்யம் — ஓத் தத்ஸவிதுவரேணியம்— பர்கோ தேவஸ்ய தீ மஹி — தியோ யோந : ப்ரயோசயாத் — ஓமாப : ஜ்யோதீ ரஸ : அம்ருதம் ப்ரஹ்ம —பூர்பு வஸ் ஜுவரோம்'

என்று பிரணவ ஒலி மிகுதியாக ஒலிக்கும்படி அமைத்து தந்துள்ளார்கள்.

காயத்ரி மந்த்ரம் உள்பட எந்த மந்த்ரம் ஜபம் செய்தாலும், தியானத்தில் ஈடுபட்டாலும் அதற்கு முன் மனதை ஒருமுகப்படுத்த பிராணயாமத்தைக் கருவியாக பயன்படுத்தலாம். மனம் ஒருமுகம் ஆகாத வரை எந்த சித்தியையும் அடைய இயலாது. நூலின் இழைகள் நாலா பக்கமும் பிளவுப்பட்டிருந்தால் ஊசிக் காதினுள் அந்நூலைச் செலுத்த முடியாது. பிளவு பட்டிருக்கும் இழைகளை முறுக்கி ஒன்றுபடுத்த வேண்டும். அதே விதத்தில் மனதை ஒருமுகப் படுத்திப் பழக வேண்டும். மனது நீர் பெருகிய ஓர் ஏரி போன்றது. அதில் விழும் ஒவ்வொரு கல்லும் அலைகளை எழுப்புகிறது. அலைகள் அடங்கி நீர்ப்பரப்பு அமைதியான பின்பு நாம் அடித்தளத்தைப் பார்க்கலாம். அலைகள் இருக்கும் வரை ஏரியின் அடித் தளத்தைப் பார்க்க முடியாது. ஏரியின் அடித்தளமே தமது ஆன்மா, ஏரியே நமது சித்தம்; அலைகளே நமது எண்ண அலைகளாகும்.

பிராணயாமம், தியானம் இவற்றால் உடலின் ஆற்றலும், உள்ளத்தின் ஆற்றலும் ஒருங்கே பெருகும் என்பதுடன், மனம் அமைதி நிலை அடைகின்றது. சிந்தனைத் திறன் பெருகுகின்றது. உறக்கத்தின் ஓய்வை விட உண்மையான ஓய்வு கிட்டுகிறது. வியாதிகள் நீங்குகின்றன.




# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜீ. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர்: டாக்டர். எஸ். பீ. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர் (எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# பரிபாடலில் வைணவம்

**பரிபாடல் :**

பரிபாடல் என்பது தமிழ் யாப்பிலக்கணம் கூறும் செய்யுள் வகைகளுள் ஒன்ருகும். இச்செய்யுளின் பெயரையே தனக்குப் பெயராகப் பெற்றுள்ளது பரிபாடல் என்னும் இலக்கியம் ஆகும். இவ்விலக்கியம் சங்க காலத்தை சார்ந்தது. இதில் இருபத்திரண்டு பாடல்கள் உள்ளன. இவை தவிர, சில பாடல்கள் கிடைக்கப்பெற்று, அவை பரிபாடல் திரட்டு எனச் சேர்க்கப்பட்டுள்ளன.

பரிபாடலில் ஆறும் பரிபாடல் திரட்டில் ஒன்றுமாக ஏழு பாடல்கள் திருமால் பற்றிய கருத்துக்களைத் தருகின்றன. கீரந்தையார், கடுவன் இளவெயினனுர், நல்லெழுநியார், இளம்பெருவழுதியார் என்னும் புலவர்கள் இப்பாடல்களை இயற்றியுள்ளனர். இப்பாடல்கள் திருமாலின் அருளை வேண்டி, அவன் அருந்திறல்களையும் அருள்மாட்சியினையும் இயல்புகளையும் விவரித்துக் கூறும் துதிப்பாடல்களாக அமைக்கப்பட்டுள்ளன.

**இறைமைக் கோட்பாடு :**

திருமால்பற்றிய பரிபாடல்களின் அடிப்படையில் இறைமைக் கோட்பாடு ஆராயப்படுகின்றது.

**கடவுள்:**

இறைவன் இன்ன இயல்பு உடையவன்; இப்படிப்பட்டவன் என்று சொற்களால் விவரித்துக் கூறுவதற்கு இயலாதவன். அவன் பண்புகளையும் ஆற்றலையும் கசடறக் கற்றுத் தேர்ச்சியடைந்த பேரறிஞர்களாலும் விவரித்துக் கூறுதல் இயலாது.

தெருள நின்வரவு அறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும்
அரிதே (1:32,33)

அவன் என்றும் அழியாத உண்மையானவன் (ஸத்); நிலையாக இருப்பவன்; அனைத்துலகங்கட்கும் ஆற்றலுக்கும் மூலகாரணமானவன்.

மன்னிய முதல்வன் (1:56)

அவன் காலவரையறையைக் கடந்தவன்; இளமையானவற்றுக்கு எல்லாம் அவனே மிக இளையவன். முதுமையானவற்றுக்கு எல்லாம் அவன் முதியனுக உள்ளான்.

கால முதல்வன் (3:61)
முதல் முறை இடை முறை கடைமுறை
தொழிலில்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோர்
இலையே (3:71,72)

**அறவேந்தன் :**

திருமால் அறத்தின் வடிவாக உள்ளான். அவன் அருளாக உள்ளான். தன்னைச் சரணடைவோரைக் காத்து, மக்களைத் தீதுறுத்தும் கொடியவரை வெருட்டும் ஆற்றலுடையவன். இக்கருத்து இறைவனின் அவதாரக் கோட்பாட்டை வெளிப்படுத்துகின்றது.

விறல்மிகு விழுச்சீர் அந்தணர்
காக்கும்
அறனும் ஆர்வலர்க்கு அருளும் நீ
திறனிலோர் திருத்திய தீதுதீர்
கொள்கை
மறனும் மாற்றலர்க்கு அணங்கும் நீ
(1:42-45)

இவ்வுலகை ஆளுகின்ற மானிட மன்னர்கள் ஒரு நாள் தம் ஆற்றலும் மாட்சியும் தேய்ந்து மாயக்கூடியவர்கள். ஆனுல் இறைவன் ஒருவனே என்றும் அழியாது, நிலைத்து நின்று உலகை ஆளுகின்ற மாட்சி உடையவன். அவன் அருளைக் கொற்றக் குடையாகக் கொண்டு, உயிர்களைக் கொடுமை, வறுமை போன்ற வெப்பத்தினின்றும் காக்கின்ருன். அறமே அவனது செங்கோலாக இருந்து அரசாணை செலுத்துகின்றது.

அருட்குடையாக அறங்கோலாக
இருநிழல் படாமை மூவேழ் உலகமும்
ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ
(3:74-76)
மாயா மன்ன ! உலகாள் மன்னவ
(3:85(

**தனக்குவமையிலான் :**

திருமாலாகிய இறைவன் மனத்தால் இத்தகைய இயல்பினன், வடிவினன் என்று சிந்தித்துப் பார்த்தற்கு இயலாதவன். அவன் மனம், மொழி, மெய் எஃனும் திரிகரணங்களின் செயல்கட்கு அப்பாற்பட்டவன். அவன் விரிந்து அகன்ற அறிவு உடையவன்; அவனது அறிவு தானே விளங்குவது. இவ்வாறு அனைத்துவகையீலும் வரையறை—எல்லை அற்றவன் இறைவன்; வேதங்களுக்கு மூலமாக விளங்குபவன்.

டாக்டர். பெ. சுயம்பு,
திருச்செந்தூர்.

விரிந்தகன்ற கேள்வி அனைத்தினும்
வலியினும் மனத்தினும் உணர்
வினும் எல்லாம்
வனப்பு வரம்பு அறியா மரபினேயே
(3:48-50)
முன்னை மரபின் முதுமொழி முதல்வ
(3:47)

இறைவன் 'வேண்டுதல் வேண்டாமை இலான்'. எனவே அவனுக்கு, 'இவன் நமக்கு வேண்டியவன், இவன் வேண்டாதவன்' என்று பிரித்துப் பார்க்கும் உணர்வு கிடையாது. அனைத்து உயிர்களும் அவனுக்குச் சமமான உறவு உடையனவே. மேலும், அவன் 'தனக்குவமை இலான்'. எனவே அவனுக்கு நிகரானதாக வேறொன்றைப் பொருத்திக்காட்டுவது அறிவுடைமையாகாது.

.........நினக்கு
மாற்ருேரும் இலர் கேளிரும் இலர்
(4:53,54)

பகைவர் இவர் இவர் நட்டோர்
என்னும்
வகையும் உண்டோ.........(3:57,58)

**விச்வருபன் :**

பரிபாடல் இறைவனை இன்ன வடிவை உடையவன் என்று வரையறை செய்வதற்கு இயலாதவனைக் காட்டுகின்றது. அவன் ஒரு குறிப்பிட்ட வடிவைத் தனக்கு என உடையவன் அல்லன். ஏனெனில் நாம் காணுகின்ற அனைத்தும் அவனது வடிவங்களே ஆகும். உலகில் நாம் கணந்தோறும் கண்டு உணருகின்ற அனைத்துப் பொருட்களுக்கும் இறைவனே புறவடிமாகவும் அவற்றின் உள்ளே உறைந்து இயக்குகின்ற மையப் பொருளாகிய ஆன்மாவாகவும் விளங்குகின்றான். அனைத்துச் செயல்களுக்கும் காரணமாகவும் காரியமாகவும் அவனே பரிணமிக்கின்றான். பொருளும் அவற்றின் உள்ளுறையாகிய குணமும் திருமாலே ஆவான். இறைவனே விசும்பு; அதன்கண் உளதாய ஒலியும் அவனே. ஏனைய உலகப் பொருட்களின் மூலப் பொருட்களாகிய பூதங்கள்—காற்றும் தீயும் நீரும் நிலமும் அவனே. கதிரவனும் திங்களும் முதலிய கோள்களும் அவனே. அவனே பொருட்கள்; அவனுடைய குணங்களே பொருட்களுக்கும் குணங்களாகும்.

திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ
(1:45)
தீயினுள் தெறல் நீ பூவினுள்
நாற்றம் நீ (3:63)
நின்வெம்மையும் விளக்கமும்
ஞாயிற்று உள
நின் தண்மையும் சாயலும் திங்கள்
உள
..................................
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து
உள (4:25-31)

நாக்கு, செவி, கண், மூக்கு, உடல் (தோல்) என்னும் ஐம்பொறிகளே அன்றி, அவற்றால் உணரப்படுகின்ற ஐம்புலன்களாகிய சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு என்பனவும் இறைவனே ஆவான்.

சுவைமை இசைமை தோற்றம் நாற்றம்
ஊறு
அவையும் நீயே......
அவையவை கொள்ளும் கருவியும்
நீயே (13:14-16)

மொத்தத்தில் பரிபாடல் இறைவனே எல்லாமாக விளங்குகின்றான் என்பதை விளக்குகின்றது.

அனைத்தும் நீ அனைத்தின் உட்
பொருளும் நீ ஆதலின்
உறையும் உறைவதும் இலையே
(3:68,69)
எவ்வயினோயும் நீயே (4:70)

**விஷ்ணு :**

திருமால் ஒருவனே உடலாகவும் அதனுள்ளே உறையும் உயிராகவும் விளங்குகின்றான். அவனே மனம், புத்தி, அகங்காரம், பொறி, புலன் முதலிய அனைத்துத் தத்துவங்களாகவும் இயங்குகின்றான்; இவ்வுலகில் காணப்படுகின்ற உயிரினங்களும் அவை வாழுதற்கு ஆதாரமாக உள்ள இடமாகவும் கருப்பொருளாகவும் விளங்குகிறான். அவனே இருப்பிடம்; அவனே இருப்பிடத்தில் உறைகின்ற பொருட்கள் ஆவான். 'அஹம் அன்ன: அன்ன: அன்ன: (நானே உணவு), அஹம் அன்னதூ அன்னதூ (உண்பவன்)' என்னும் மறைமொழி இங்குக் குறிப்பிடத்தக்கது. 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்பதும் பரிபாடலின் இக் கருத்தையே உட்கொண்டது. உலகப் பொருட்களுக்கெல்லாம் இருப்பிடமாகவும் அவற்றையே தனக்கு இருப்பிடமாகவும் கொண்டவன் என 'விஷ்ணு' என்னும் பெயருக்குப் பொருள் கூறும் மரபும் இவண் ஒப்பிடத்தக்கது.

**விசிஷ்டாத்வைதம் :**

திருமால் என்னும் ஓர் உண்மைப் பொருளே (ஸத்) பலவகை உருவங்களுடன் வெவ்வேறாகக் காட்சி தருகின்றது. அப்பொருட்கள் அனைத்தும் அறிவு (சித்) உடைய ஆன்மாவாகவும், அவ்வான்மா உறைந்து, வாழுதற்கு ஆதாரமான அறிவற்ற (அசித்) உலகாகவும் வெவ்வேறாகித் தோன்றுகின்றன. ஒரே பொருளே பலவாகக் காட்சி தருகின்றது. அவ் வேறுபாடு—பன்மை பரிணும முறையில் அமைந்து கிடக்கின்றது. பாலிலிருந்து தயிரும், மோரும், வெண்ணெயும், நெய்யும் என்றும் பல்வேறு வடிவப் பொருட்கள் பரிணமிப்பது போன்றது இது. ஒரே நீர்த் துளியாக சிற்றலையாக—பேரலையாக— பெரு வெள்ளமாகப் பரிணுமம் கொள்வதை ஒத்ததது இந்த உலகப் பரிணுமமும். துளியும், வெள்ளமும் நீருக்கு அடையாகி, அதனைச் சிறப்பிப்பதைப் போன்று, உலகமும் ஆன்மாக்களும் திருமாலுக்கு அடையாக விளங்குகின்றன. இந்த அடையை வடமொழி வல்லுநர் விசேஷம் என்பர். எனவே இவ்வுலகும் அதன் தத்துவமும் (இறைவன் உட்பட) 'அடை பெற்ற ஒருமை' யாக விளங்குகின்றன. அதாவது 'விசிஷ்டாத்வைதம்' என்னும் கோட்பாடு நிலவுகின்றது.

**ஸத்காரியவாதம் :**

பரிபாடல் வெளிப்படுத்துகின்ற இறைவன் பற்றிய உலகு பற்றிய— உயிர் (ஆன்மா) பற்றிய கோட்பாடு விசிஷ்டாத்வைதம் என்னும் வைணவக் கோட்பாடாகும். பரிபாடலில் இடம் பெற்றுள்ள திருமால் பற்றிய பாடல்கள் 'ஸத்காரியவாதம்' உடையவை. அதாவது வெவ்வேறாகக் காணப்படுகின்ற அனைத்தும் ஒரே உண்மையின் காரியத்தால் உருவானவையாகும். விஷ்ணுவே அனைத்துமாக இருப்பதனுல், காணப்படுகின்ற அனைத்தும் உண்மையே அன்றி, பொய்மையன்று. இந்த வாதம் திருமால் பற்றிய பரிபாடல்களில் இடம் பெற்றுள்ளது.

# ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்

**कमलाकुचचूचुककुङ्कुमतो नियतारुणितातुलनीलतनो ।**
**कमलायतलोचन लोकपते विजयीभव वेङ्कटशैलपते ॥**

கமலா குச சூசுக குங்குமதோ
நியதாருணிதாதுல நீலதநோ |
கமலாயதலோசந லோகபதே
விஜயீபவ வேங்கடசைலபதே ||

பதவுரை :—*கமலா குச சூசுக குங்குமத:=திருமகள் மார்பகத்தின் அக்ரபாகங்களில் உள்ள குங்குமத்தினால்; நியத அருணித அதுல நீல தநோ=எப்பொழுதும் சிவந்திருக்கும் ஒப்பற்ற கரிய திருமேனியையுடையவனே! கமல ஆயத லோசந=தாமரை மலர் (இதழ்) போல் நீண்ட திருக்கண்களை உடையவனே! லோகபதே=எல்லா உலகங்களுக்கும் இறைவனே! வேங்கட சைலபதே=திருவேங்கடமலைக்குத் தலைவனே! விஜயீ பவ=வெற்றியுடன் விளங்குக.*

கருத்துரை :—*நீ பரமபதத்திலிருந்து திருவேங்கடத்திற்கு வந்து எழுந்தருளியிருப்பது உலகங்களைக் காப்பாற்றுவதற்காகவே. எல்லாவுலகங்களுக்கும் நீ தலைவன் ஆனமையின் அது உன் பொறுப்பு. நீ அவ்வாறு செய்வாய் என்பதைக் கருணை வழிந்தொழுகும் நினது திருக்கண்கள் காண்பிக்கின்றன. நாங்கள் கடமையில் தவறும் பொழுது உன் திருவுள்ளம் சிறிது சீறுமாயினும் அதை ஆற்ற அலர்மேல்மங்கை அருகில் உள்ளாள். நீ அவள் சொல்லை மீற மாட்டாய் என்பது அவளுடன் எப்பொழுதும் இணைபிரியாமலிருப்பதினாலேயே தெரிகின்றது.*

**सचतुर्मुखषण्मुखपञ्चमुखप्रमुखाखिलदैवतमौलिमणे ।**
**शरणागतवत्सल सारनिधे परिपालय मां वृषशैलपते ॥**

ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக
ப்ரமுகாகில தைவத மௌலி மணே |
சரணாகத வத்ஸல ஸாரநிதே
பரிபாலய மாம் வ்ருஷசைலபதே ||

பதவுரை :—*ஸ சதுர்முக=நான்முகனோடு கூடிய; ஷண்முக பஞ்சமுக ப்ரமுக அகில தைவத மௌலி மணே!=ஆறுமுகன் (கந்தன்) ஐம்முகன் (சிவன்) முதலிய எல்லா தேவதைகளுக்கும் சிரோரத்தினமே! சரண ஆகத வத்ஸல=புகல் அடைந்தவர்களிடத்து அன்புள்ளவனே! ஸார நிதே=உயர்ந்த நிதியே (வைப்பே); வ்ருஷ சைல பதே=(வ்ருஷம் என்னும்) திருமலைக்குத் தலைவனே! மாம்=என்னை; பரிபாலய=காப்பாற்றுவாயாக.*

கருத்துரை :—*அயன் அரன் முதலிய எல்லாக் கடவுளரும் உன்னைத் தந்தம் தலைகளில் வைத்துக் கொண்டாடுகின்றனர். நீயும் பிறகுறைகளைப் பாராது சரணமடைந்தனர் என்ற ஒரு குணத்தை மாத்திரத்தையே கண்டு அனைவரையும் அன்புடன் காத்தருளுகிறாய். ஏழைகள் ஏழ்மையின் கொடுமை தாளாத ஸமயத்துத் தாங்கள் சேமித்து வைத்துள்ள நிதியை எடுத்து உபயோகித்துக் கொள்ள எண்ணுவதுபோல், அனைவரும் பெருங் கஷ்டங்களில் உன்னையே அடைய வேண்டியிருக்கிறது. அத்தகைய நீ என்னைக் காப்பாற்றுக.*

**अतिवेलतया तव दुर्विषहैः अनुवेलकृतैरपराधशतैः ।**
**भरितं त्वरितं वृषशैलपते परया कृपया परिपाहि हरे ॥**

அதிவேலதயா தவதுர்விஷஹை
ரநுவேல க்ருதை ரபராத சதை: |
பரிதம் த்வரிதம் வ்ருஷ சைல பதே
பரயா க்ருபயா பரிபாஹி ஹரே ||

பதவுரை :—*அநு வேல க்ருதை: = ஒவ்வொரு பொழுதும் செய்யப் பட்டவையும்; அதி வேல தயா:=கரை கடந்துள்ள (அளவு மீறிப் போன)மையால்; தவ = உனக்கும்; துர்விஷஹை = பொறுக்க மாட்டாதவைகளுமான; அபராத சதை:=நூற்றுக் கணக்கான தவறுகளால்; பரிதம்=நிறைந்துள்ளவனும்; த்வரிதம்=(அதைப் போக்கிக் கொள்வதற்காக உன்னிடம்) விரைந்து வந்தவனுமான; (மாம்=என்னை); வ்ருஷ சைல பதே=திருமலை நாதனே! ஹரே=ஸ்ரீ ஹரியே! பரயா=உயர்ந்த; க்ருபயா கருணையால்; பரிபாஹி - காப்பாற்றுக.*

கருத்துரை :—*பொறுமைக் கடலாகிய நீயும் பொறுமையிழக்கும் வண்ணம் நான் ஒவ்வொரு போதும் அளவு கடந்த தவறுகள் இழைத்துள்ளேன். ஆயினும் நீ காப்பாற்றுவாய் என்ற நம்பிக்கையுடன் உன்னிடம் விரைந்து வந்துள்ளேன். உன் பெரிய திருவருள் என்னைக் காப்பாற்ற வேண்டும்.*

**अधिवेङ्कटशैलमुदारमते जनताभिमताधिकदानरतात् ।**
**परदेवतया गदितान्निगमैः कमलादयितान्न परं कलये ॥**

அதிவேங்கடசைலமுதாரமதேர்
ஜநதாபிமதாதிகதாநரதாத் |
பரதேவதயா கதிதாந் நிகமை:
கமலாதயிதாந் ந பரம் கலயே ||

பதவுரை :—அதி வேங்கடசைலம்=திருவேங்கட மலைமேல் (உள்ளவனும்); உதார மதே:=வண்மை (வள்ளல் தன்மை)யுடைய மனதுடையவனும்; ஜநதா அபிமத அதிக தாந ரதாத்=மக்கள் திரள் கோருவதினும் அதிகமாகத் தருவதில் விருப்பமுள்ளவனும்; நிகமை:=வேதங் (உபநிஷத்துக்)களால்; பர தேவதயா=பரம்பொருள் என்று; கதிதாத்=சொல்லப் பட்டவனும்; கமலா தயிதாத்=திருமகள் அன்பனும் ஆன; த்வத்=உன்னிலும்; பரம்—உயர்ந்தவனை; ந கலயே=(நான்) அறியவில்லை.

கருத்துரை :—நீ வரையாதருளும் வள்ளல் ஆனமையின் அடியார் கோரும் பயன்களையும், அவர் கோராவிடினும் அவர்களுக்கு நன்மையான வேறு பயன்களையும் அதிகமாக அளிக்கின்றாய். ஐயம் திரிபுகளுக்கு இடமின்றி உபநிஷத்துக்கள் எல்லாம் நீயே பரம்பொருள் என்று அறுதியிடுகின்றன. எல்லாரினும் உயர்ந்த திருமகளும் உன்னையே தன் அன்பனாக வரித்தாள். ஆதலின் உன்னிலும் உயர்ந்தவன் ஒருவன் இல்லை என்ற உண்மையை அடியேன் உறுதியாய் நம்புகின்றேன்.

कलवेणुरवावशगोपवधूशतकोटिवृतात्स्मरकोटिसमात् ।
प्रतिवल्लविकाभिमतात्सुखदात वसुदेवसुतान्न परं कलये ।।

கலவேணு ரவாவசகோபவதூ
சதகோடிவ்ருதாந் ஸ்மரகோடிஸமாத் |
ப்ரதிவல்லபி காபிமதாத்ஸுகதாத்
வஸுதேவஸுதாந் ந பரம் கலயே ||

பதவுரை :—கல=இனிய; வேணு=குழல்; ரவ= ஓசையால்; அவச=பரவசரான (தன்வயமிழந்த); கோப வதூ=ஆயர் மங்கையர்களின்; சத கோடி= நூறுகோடி (பலர்)களால் வ்ருதாத்=சூழப்பட்டவனும்; ஸ்மர கோடி ஸமாத்=கோடி மன்மதர்களுக்கு ஒப்பானவனும்; ப்ரதி வல்லவிகா அபிமதாத்=ஒவ்வொரு ஆயர் கன்னிகையாலும் விரும்பப் பெற்றவனும்; ஸுகதாத்=சுகங்களைக் கொடுப்பவனும்; வஸுதேவ ஸுதாத்=வஸுதேவர் திருக்குமாரனுமான; த்வத்=உன்னிலும்; பரம்=உயர்ந்தவனை; ந கலயே=(நான்) அறியவில்லை.

கருத்துரை :—ஆயிரம் கோடி மன்மதர்கள் சேர்ந்தாலும் உன் அழகுக்கு இணையாகார். விருப்பு வெறுப்பற்ற ஆயர்மங்கையர் உன் குழலோசைக்கு மயங்கி உன்னைச் சூழ்ந்து ஒருவர்க்கொருவர் பகையாது உன்னை விரும்பியடைந்தனர். மோக்ஷ ஸுகத்தைக் கொடுப்பவனும் நீயே. வஸுதேவர் முன் பிறவியில் நான்முகனுக்கு உப(உதவி) ப்ரஜாபதியாய் இருந்த பொழுது உன்னைத்தொழுது உன் அருள் பெற்று உன்னை மகனாய் அடைந்தார். இந்நான்கு காரணங்களும் நீயே பரம்பொருள் என்பதற்குப் போதுமான சான்றுகள்.

குறிப்பு :—(1) அழகுடையவனே தலைவனாயிருக்க முடியும். (2) அடியார்கள் ஒருவர்க்கொருவர் பகையற்றிருப்பது பரம்பொருள் ஸந்நிதானத்தில்தான். (3) ஆதி காரணம்தான் த்யானம் செய்யப்பெறும். அதுதான் மோக்ஷ ஸுகத்தைக் கொடுக்க முடியும். (4) வஸுதேவர் முதற்பிறவியில் ஸுதபா என்ற ப்ரஜாபதியாய் இருந்தார். ஆதலின் அவர் உண்மையையறிய முடியும்.

अभिरामगुणाकर दाशरथे जगदेकधनुर्धर धीरमते ।
रघुनायक राम रमेश विभो वरदो भव देव दयाजलधे ।।

அபிராமகுணாகர தாசரதே
ஜகதேகதநுர்தர தீரமதே |
ரகுநாயக ராம ரமேச விபோ
வரதோ பவ தேவ தயாஜலதே ||

பதவுரை :—அபிராம குண ஆகர=(அனைவரும்) விரும்பத்தக்க கல்யாண குணங்களுக்கு இருப்பிடமானவனே! தாசரதே=தயரதன் திருமகனே! ஜகத் ஏக தநுர்தர=(எல்லா) உலகங்களிலும் ஒப்பற்ற வில்லாளியே! தீர மதே=மாறா மனதுடையவனே! ரகு நாயக=ரகுகுலத் தலைவனே! ராம=(அனைவரையும்) களிக்கச் செய்பவனே! ரமா ஈச=திருமகள் (பிராட்டி) நாதனே! விபோ=எங்கும் நிறைந்தவனே! தேவ=விளங்குபவனே! தயா ஜலதே = கருணைக் கடலே! வரத:=வரம் கொடுப்பவனாக; பவ=ஆகக் கடவாய்.

கருத்துரை :—ரகுவம்சத்தில் தயரத சக்ரவர்த்திக்குத் திருமகனாய் அவதரித்துத் தன் அழகாலும் குணங்களாலும் உலகங்களைக் களிக்கச் செய்து ஒப்பற்ற வில்லாளியாகவும் மாறா மனதுடையவனாகவும் விளங்கிய ஸ்ரீராமனும் நீயே! 'ததாம் யேதத் வ்ரதம் மம' என்று கூறியதை நிறைவேற்றுவாயாக.

(தொடரும்)

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

நாம் வழிபடவே, நம் பெரியோர்கள் பல க்ஷேத்திரங்களில் கோயில்களமைத்து, அர்ச்சாவதாரமூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்து, நாம் கூடிக் கலந்து அனுபவிக்கும் பொருட்டு, தேர்த்திருவிழாக்களையும் நடத்த ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். பகவானை, நல்ல காரியங்களைப் பக்த குழாங்களுடன் கூடியிருந்து அனுபவிக்க வேண்டும். ஆண்டாளும், திருப்பாவையில் நோன்பு நோற்று பகவானை அடைய, தோழியரை எழுப்பி எம்பெருமானை வழிபடுகிறாள். பெரியாழ்வாரும் திருப்பல்லாண்டில், "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொண்மின்", என்றும் 'ஏடு நிலத்திலிடுவதன் முன்னம் வந்து எங்கள் குழாம் புகுந்து கூடுமனமுடையீர்கள், வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ', என்று கூறுவதும் எடுத்துக் காட்டு. கோவிலுக்கும், உபன்யாசம், சத்சங்கம் போவது அப்பகவானைக் காண்பதற்கும் அவனது புகழைக் கேட்பதற்குமேயாகும்.

அர்ச்சையில், ஈடுபட அம்மூர்த்தியிடம் நம்பிக்கை வேண்டும். நாம், நமக்கு வேண்டியவரது படத்தைப் பார்க்கும்போது, அவரையே நேரில் பார்ப்பது போன்ற உணர்ச்சியை அடைகிறோம். அதை காகிதம்-படம் என்று கருதுவதில்லை. அதே மாதிரி, அர்ச்சையில், அர்ச்சாவதார மூர்த்தியை சேவிக்கும்போது, பகவானே நம்மை அனுக்கிரகிப்பதாக எண்ணிச் சேவிக்க வேணும். அப்போதுதான் பக்தி ஞானம் கிட்டும். அதுவே விரக்தியாகவும் மாறும். நம் பூர்வாச்சாரியர்கள், ஆழ்வார்கள் அர்ச்சையிலே ஈடுபட்டு, மனதைப் பறிகொடுத்து, அதன் பயனால் அவனை நேரிலேயே கண்டு ஆனந்த மடைந்திருக்கிறார்கள்.

நம் பூர்வாசாரியர்கள் கூறும்போது:

## தெரிந்து கொள்ளுங்கள் :

## இறைவனுக்கு பூஜையில் செய்யப்படும் உபசாரங்கள்

1. தியானம்.
2. ஆவாஹனம்.
3. ஆசனம்.
4. அர்க்கியம்.
5. ஆசமனம்.
6. அபிஷேகம்.
7. வஸ்திரம்.
8. சந்தனம்.
9. அலங்காரம், அர்ச்சனை.
10. தூபம்.
11. தீபம்.
12. நிவேதனம்.
13. ஆரத்தி.
14. புஷ்பாஞ்சலி.
15. வலம்வரல்.
16. பிழை பொறுக்க வேண்டுதல்

என்பன.

தொகுத்தவர் : திருமதி. கமலா மாரியப்பன்

" அர்ச்சாவதாரோ பாதான
வைஷ்ண வோத் பக்தி சிந்தனம் |
மாத்ருயோனி பரிக்ஷாயா:
துல்ய மாஹுர் மநீஷின: ||

அதாவது அர்ச்சாமூர்த்தியை எந்த உருவத்தால் செய்தது என்று சிந்திப்பதும், ஒரு பக்தன் எந்த ஜாதியில் பிறந்தவன் என்று சிந்திப்பதும், மாதாவின் யோனியைப் பரீக்ஷிப்பதை யொக்கும். இதனால், பலனடையாது பாவமே சம்பவிக்கும்.

நம் பூர்வாசாரியர்கள், ஆழ்வார்கள், நாயன்மார்கள் அர்ச்சையில் ஈடுபட்டிருந்தது அவர்கள் நூல்களிலிருந்து தெரிய வருகிறது. ஆவரண நீர் போல பரமபதத்தில் இருக்கிறான் வாசுதேவன். திருப்பாற்கடல் நீர் போல வ்யூஹமூர்த்தி. பெருக்காற்று நீர் போல விபவம். அதாவது தண்ணீர் ஓடும் காலத்தில்மட்டும் இருப்பவர் அனுபவிக்கலாம். விபவ காலத்தவர்களே அனுபவிக்க முடியும். பூமிக்கடியில் உள்ள நீர்போல அந்தர்யாமி.வெட்டி எடுத்து, ஊற்று நீரை எடுத்து தாகத்தைத் தணித்துக் கொள்ள முடியும். அதுபோல தியானத்தின்மூலம் நம் ஹிருதய கமலத்திலிருப்பதை அறிய முடியும். தேங்கியுள்ள அல்லது தடாகத்தின் நீர் போல அர்ச்சை. சுலபமாய் விடாய் தீர்த்துக் கொள்ளலாம். சுலபமாக அவனைச் சேவிக்கலாம்.

பரமபதத்தில் பகவான், இந்த ஜீவனையும், பிரபஞ்ஜத்தையும் ஆபரணங்களாகவும், திவ்யாயுதங்களாகவும் அணிந்திருக்கிறானென்று விஷ்ணு புராணம் கூறுகிறது.

புருடன், ஜீவாத்மாவே கௌஸ்துப மணியாகவும்-ப்ருக்ருதியை ஸ்ரீவத்ஸம் என்னும் திருமறுவாகவும், மஹத்தை - புத்தியை - தண்டாகவும், தாமஸ அகங்காரத்தை சாரங்கம்

# எப்போது காணலாம்?

இரவில் வானத்தில் எண்ணற்ற நட்சத்திரங்களைப் பார்க்கிறாய். சூரியன் உதித்தவுடன் அவை அனைத்தும் பார்வையிலிருந்து மறைகின்றன. ஆனபடியால் நட்சத்தரங்களே கிடையாது என்று சொல்வாயா? இரவு வந்தால் அவை கண்ணுக்கு மறுபடியும் தெரியும். உனது அஞ்ஞானத்தின் பெரிய வெளிச்சத்தில் ஈசுவரனைக் காண முடியாததால் கடவுளே கிடையாது என்று சாதிக்காதே. உனக்கே ஞான தசை வரும்போது அவனைக் காண்பாய்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.
அனுப்பியவர் : கமலா மாரியப்பன்.

என்னும் வில்லாகவும், கர்மேந்திரியங்கள், ஞானேந்த்ரியங்களுக்கு ஆதியான ஸாத்வீக அகங்காரத்தைச் சக்கரம் திருவாழியாகவும், பஞ்ஜதன் மாத்திரைகளையும், பஞ்சபுதங்களையும் வைஜயந்தி வனமாலைகளாகவும், ஜ்ஞானேந்த்ரிய, கர்மேந்த்ரியங்களைப் பாணமாகவும், தெருள், ஞானம், நந்தகமென்னும் வாளாகவும், மருள் (அஜ்ஞானம்) 'அதன்' உறையாகவும் ஆக்கி அணிந்து கொண்டிருக்கிறான் என்று ஸ்ரீ வேதாந்த தேசிகன் கூறுகிறார் என்பதாகும்.

ஈஸ்வர தத்துவம் பரப்பிரும்மமே. ரஜோ குணத்துடன், சதுர்முக பிரும்மாவாய் சிருஷ்டியைச் செய்கிறான். ஸத்வ குணத்துடன் விஷ்ணுவாகவும் ரக்ஷணம் புரிந்து, தாமஸ குணத்துடன் ருத்ரனுதி ஸம்ஹாரத்தைச் செய்கிறான். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் பாடுகிறார்: (72-ம் பாசுரம்)

"முதலாம் திருவுருவம்—மூன்றென்பர்,
ஒன்றே,
முதலாகும் மூன்றுக்குமென்பர்
முதல்வா,
நிகரிலகு காருருவா! நின்ருகத்தன்றே
புகரிலகு தாமரையின் பூ"

என்கிறார். திருமங்கை மன்னன் பெரிய திருமொழி 3-1-10ல் பாடுகிறார்:

"மூவராகிய ஒருவனை மூவுலகுண்டு
உமிழ்ந்து
அளந்தானை"

என்கிறார். மேலும் பாடுகிறார்:

"பிறைதங்குச் சடையானை வலத்தே
வைத்துப்
பிரும்மனைத் தன்னுந்தியிலே
தோற்றுவித்து,
கறைதங்குவேல் தடங்கண் திருவை
மார்பில்
கலந்தவன் தாளிணை கிற்பீர்,"
3-4-9

பாருருவில் நீர்எரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏருருவில் மூவருமேயென்ன நின்ற
இமையவர் தன் திருவுருவேறெண்
ணும்போது
ஒருருவம் பொன்னுருவம் ஒன்று
செந்தீ
ஒன்று மாகடலுருவம் ஒத்துநின்ற
மூவுருவும் கண்டபோதொன்றும்
சோதி
முகிலுருவம் எம்மடிகளை உருவந்
தானே."

என்றும் திருநெடுந்தாண்டகப் பாசுரத்தில் பாடுகிறார். (2)

'நின்றதெல்லாம் நெடுமால்' என்றபடி, மும்மூர்த்திகளும் உலகிலுள்ள யாவும் அவனே. அதனுல் அவன் எல்லாவற்றையும் தன் உடலாய்க் கொண்டு, அவற்றின் ஆத்மாவாய் விளங்குகின்றான். திருமழிசை ஆழ்வார் நான்முகன் திருவந்தாதி— 1-ம் பாசுரத்தில் பாடுகிறார்:

நான்முகனை நாராயணன் படைத்தான்
நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத்தான்
படைத்தான்-யான் முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன்
ஆழ்பொருளை
சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து"

நம் பூர்வர்கள் பிரும்மனையும் ருத்திரனையும் ஜீவகோடிகளில் சேர்த்து, அவர்களுக்கும் அந்தர்யாமியாயிருந்து, ஸ்ரீமந் நாராயணன் வேலைகளைச் செய்கிறானென்று நிர்ணயித்திருக்கிறார்கள். மோக்ஷத்தைக் கொடுக்கும் சக்தி நாராயணனே மூவரிலும் முதல்வன் என்பது கஜேந்திரன் என்னும் யானை 'ஆதிமூலமே' என அழைத்ததினுல் விளங்கும்.

ஈஸ்வரனுக்கும் நமக்குமுள்ள சம்பந்தம் அறுதியானது. பெரியாழ்வார் பாடுகிறார்: 'அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு', என்கிறார். ஜீவனே, பரமாத்மாவிற்கு உடல். அதனுள் அந்தர்யாமியாயிருக்கிறான். இந்த ஜீவன், தன்னை வந்தடைய வேண்டுமென்று அவன் எண்ணுகின்றான். நாமோ அவனை மறந்து இகலோகசுகத்தை விரும்பி, சம்சாரத்தில் உழல்கின்றோம். ஈஸ்வரனுக்கும், அவன் அடியார்க்கும் தொண்டு புரிவதே பரம புருஷார்த்தம்.

ஆக எல்லா ஆழ்வார்களும், ஆசாரியர்களும் அவனுக்கே ஆட்செய்ய வேண்டுமென்றும், அவனையே போற்றிப் புகழ்ந்து அவனை வழிபடுதலே பரம புருஷார்த்தமென்று விளக்கியுள்ளார்கள். அவனை அடைய ஏதாவதொரு சம்பந்தத்தை நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அவனது சௌசீல்ய, ஸௌலப்ய, வாத்ஸல்யாதி குணங்களைச் சிந்தித்து, அவனை அடைவதற்கு முக்கிய வழியை ஆசார்யர்களிடம் தெரிந்து கொண்டு நடப்பதே நாம் செய்ய வேண்டிய கடமை.

# சிவாகமங்களுள் நாட்டியம்

சிவபெருமான் செய்தருளுகின்ற தாண்டவங்கள் நூற்றெட்டு என்பர். இவை அவர் செய்தருளுகின்ற ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐஞ்செயல்களுள் அடங்கும்.

**தாண்டவ மூர்த்தம் :**

உயிர்கள் மலம் நீங்கித் தூய்மையடைந்து பேரின்பம் அடைவதற்காக,மேலே கூறப்பட்ட ஐந்து செயல்களையும் கடவுள் இடைவிடாமல் செய்து கொண்டிருக்கிறார். இச்செயல்களைத் தாண்டவமாகச்(கூத்தாகச்) செய்கிறார் என்பர். கடவுள் செய்தருள்வது ஞானக்கூத்து. கடவுளோ உருவம் இல்லாதவர்; ஊனக் கண்ணால் காணமுடியாதவர். ஆகவே அவர் செய்தருள்கின்ற ஐஞ்செயலாகிய தாண்டவத்தை ஊனக்கண்களால் காணமுடியாது. ஆனால் ஐஞ்செயல் தத்துவத்தைப் பாமர மக்களும் நன்கு விளங்கிக் கொள்ளும் பொருட்டுச் சைவசித்தாந்த சாத்திரம் அறிந்த அறிஞர்கள் தாண்டவ உருவத்தைக் கற்பனை செய்து காட்டியிருக்கிறார்கள்.

பரந்து விரிந்த ஆகாயம் தாண்டவ மூர்த்தத்தின் உடம்பாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. 'ஆகாசமாம் உடல்' (திருமந்திரம்) 'விண்ணவர் முதலா வேறோர் இடமாகக் கொண்டுறை விசும்பே கோலநின் ஆகம்' (பட்டினத்தடிகள்) ; 'விசும்பே உடம்பு' (சேரமான் பெருமாள் நாயனார்).

திசைகளைக் கைகளாகக் கற்பித்திருக்கிறார்கள். 'திசைகள் எட்டும் திருக்கைகள்' (திருமந்திரம்) 'பத்துத் திசைகளும் பத்துக் கைகளாகும்' (காமிகாகமம்) 'திசைதோள்' (சேரமான் பெருமாள் நாயனார்).எண்டிசை எண்டோள்'' (பட்டினத்து அடிகள்).

ஐஞ்செயல்களில் மறைத்தல், அருளல் என்னும் இரண்டு செயல்களைத் தாண்டவமூர்த்தியின் இரண்டு திருவடிகளாகக் கற்பித்திருக்கிறார்கள். ஊன்றிய திருவடி, உயிர்களை வினைகளை அனுபவிக்கச் செய்து, இருவினையொப்பு, மலபரிபாகம் என்னும் பக்குவ நிலையையடையச் செய்கிறது.அதாவது மறைத்தல் தொழிலைச் செய்கிறது. தூக்கிய திருவடி குஞ்சித பாதம் எனப்படும். இந்தத் திருவடியினை பக்குவம் அடைந்த உயிருக்கு அனுக்கிரகம் என்னும் அருளைக் கொடுத்து வீடளிக்கிறதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. 'அரனுற்றணைப்பில் அமரும் திரோதாயி, அரனடி என்னும் அனுக்கிரகம் என்னே'' (திருமந்திரம்).

தாண்டவ மூர்த்திக்கு மூன்று கண்கள் கற்பிக்கப்பட்டுள்ளன. மூன்றுவதுகண் நெற்றியில் உள்ளது. இச்சா சக்தி, கிரியா கக்தி, ஞானசக்தி என்னும் மூன்று சக்திகளை முக்கண்கள் குறிக்கின்றன என்று காமிகாகமம் (कमिकाकम्) கூறுகிறது.

காதுகள் ஓங்காரத்தைக் குறிக்கின்றன என்பர். கடவுள் தமது திருக்கையில் உள்ள துடியை ஒலித்து உண்டாக்கும் ஓசை ஓங்கார வடிவுடையது என்பர்.

சடைமுடி யானை ஞானத்திற்கு அடையாளம் என்பர். 'நுண்சிகை ஞானமாம்' என்பது ''திருமந்திர'' வாக்கு.

தாண்டவ மூர்த்தியினுடைய ஊன்றிய பாதத்தின் கீழே முயலகன் உருவம் காணப்படுகிறது. முயலகனைக் கரு என்றும், அபஸ்மாரன் என்றும் கூறுவர். 'கருவின் மிதித்த கமலப் பதம்' என்பது 'திருமந்திரம்'.' காருடல் பெற்ற தீவிழிக்குறள்' என்பது கல்லாடர் வாக்கு. 'மூடாய முயலகன்' என்றார் சுந்தரமூர்த்திநாயனார். முயலகன் உருவம் ஆன்மாவில்படிந்து கிடக்கும் மலத்தைக் குறிக்கிறது.

தாண்டவமூர்த்தத்தின் கைகளில் காணப்படுகின்ற துடி, தீச்சுடர், சூலம், பாசம், பாம்பு முதலியவைகளைப் பற்றிய தத்துவக் கருத்துக்களைத் தாண்டவச் சிற்ப விளக்கத்தில் காணலாம்.

**தாண்டவச் சிற்ப உருவங்களும் அவற்றின் விளக்கங்களும் :**

ஐஞ்செயல்களுக்கு ஐந்து தாண்டவங்கள் உண்டு. ஐஞ்செயல்களில் காத்தல் இரண்டு வகைப்படும். உயிர்கள் தம் நல்வினை தீவினைகளுக்கேற்ப இன்ப துன்பங்களை நுகர்தல் வேண்டும். ஆகவே காத்தல் தாண்டவமும் இரண்டு வகைப்படும். எனவே ஐந்தொழில் தாண்டவங்கள் ஆறு ஆகும்.

'திடமுறும் அத்திதி இரண்டாம்
சுகதுன்பம் அருந்தும்
செய்தியின், அம்முறையால்
செய்தொழில் ஆறும்'

என்று பஞ்சாதிகார விளக்கம் என்னும் நூல் கூறுகிறது.

ஆகவே ஐந்தொழில்களையும் தனித்தனியே காட்டுகிற தாண்டவங்கள் ஆறும், ஐந்தொழில்களையும் ஒருங்கே காட்டுகிற தாண்டவம் ஒன்றும் ஆகத் தாண்டவம் ஏழாகும்.

இனி, தனித்தனியே தாண்டவச் சிற்ப உருவங்களைக் காட்டி அவற்றின் கருத்தை விளக்குவோம் :

**திரு எஸ். நாராயணசுவாமி,**
**எம் ஏ.,பி.எட்.,**
*திருவாவடுதுறை.*



கதையினால் செய்யப்பட்ட சதுர்முக பிரம்மன் (ஸ்ரீபிரகதீஸ்வரர் கோயில்-தஞ்சை) சித்திரமாக ஒளிர்வது திரு. ஏ. எச். பாபுவின் கை வண்ணத்தினால்.

*1.* படைத்தல் தாண்டவம்: இதற்குக் காளிகா தாண்டவம் என்றும் முனி தாண்டவம் என்றும் பெயர் கூறப்படும். இந்த மூர்த்தத்திற்கு எட்டுக் கைகள் உள்ளன. இவ் வுருவத்தின் வலப்பக்கக் கைகளில் உள்ள பொருள்களைக் கொண்டு இந்தச்சிற்பத்தின் கருத்து, படைத்தல் தொழிலைக் குறிக்கிறதுஎன்பதை அறியலாம். திரிசூலம், பாசம், துடி மூன்றும் வலப்பக்கக் கைகளில் காணப்படுகின்றன. "மூன்று பிரிவையுடைய சூலம் ஆன்மா முக்குணங்களைக் குறிக்கிறது" என்று காரணாகமம் கூறுகிறது. 'பாசக்கயிறு ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் குறிக்கின்றது" என்று காமிகாகமம் கூறுகிறது. துடி படைத்தற் செயலைக் காட்டுகிறது. "தோற்றம் துடியதனில்" என்பது வாக்கு. எனவே, மும்மலத்தினால் மறைப்புண்டு, முக்குண வசப்பட்டுள்ள ஆன்மாவுக்குத் தாண்டவப்பெருமான் தனு, கரண, புவன போகங்களைத் தருகின்றார் என்னும் தத்துவத்தை இந்தத் திருவுருவம் விளக்குகிறது.

*2. (அ)* காத்தல் தாண்டவம்: இதற்குக் கவுரி தாண்டவம், புஜங்கத் திராசம் (பாம்பை அச்சுறுத்தல்) என்றும் பெயர்கள் வழங்குகின்றன. வலக்கையில் துடியும், இடக்கையில் பாம்பும் இருக்கின்றன. பாம்பு குண்டலினி சக்தியைக் குறிக்கிறது. "கம்பீர வடிவமான நாக சக்தியானது யாவற்றையும் நிறமிப்பது" என்று காமிகாகமம் கூறுகிறது. மக்கட்பேறு, கல்விச் செல்வம் முதலியவற்றைக் கொடுத்துக் காத்தல் செயலைச் செய்வது இத் தாண்டவத்தின் கருத்து.

*(ஆ)* காத்தல் தாண்டவம்: இதற்குப் புஜங்கலளிதம் என்றும், சந்தியா தாண்டவம் என்றும், பிரதோஷ நடனம் என்றும் பெயர்கள் கூறப்படும். இதில் பாம்பு முக்கிய இடம் பெற்றிருக்கிறது. ஆனால் மேலே கூறப்பட்ட புஜங்கத்திராச நடனத்திற் போல் இந்தத் தாண்டவத்தில் பாம்பு அச்சுறுத்தப்படுவதில்லை. மற்றொரு கையில் கோடரி இருக்கிறது. இது கடவுளின் பேராற்றலையும் சத்தியத்தையும் குறிக்கிறது என்பர். இந்தத் தாண்டவத்தின் பயன் திருவும் கொற்றமும் புகழும் ஆகும் என்று சரணலயம் கூறுகிறது. எனவே இதுவும் காத்தல் செயலைக் குறிக்கிறது.

*3.* அழித்தல் தாண்டவம்: இந்தத் தாண்டவ உருவத்தின் சிறப்பு என்னவென்றால், கைகளில் துடியும் தீச்சுடரும் மாறியிருப்பதுதான். அதாவது, பொதுவாகத் தாண்டவ உருவங்களில், வலக்கையில் காணப்படுகிற துடி இடக்கையிலும், இடக்கையில் இருக்கிற தீச்சுடர் வலக்கையிலும் இந்தச் சிற்பத்தில் இடம் மாறிக் காணப்படுகின்றன. எனவே தீச்சுடருக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தாண்டவத்தில், "அரன் அங்கிதன்னில் அறையில் சங்காரம்" என்பது "திரு மந்திர" வாக்கு. "சாற்றிடும் அங்கியிலே சங்காரம்" என்பது உண்மை விளக்கம். "தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும், மாற்றுவது ஆரழல் வைத்ததோர் கரமே" என்

பது சிதம்பர மும்மணிக் கோவை. எனவே இது சங்காரம் என்னும் அழித்தல் செயலை, அதாவது ஆன்மாக்களை இளைப்பாற்றும் செயலைக் குறிக்கிறது.

4. மறைத்தல் தாண்டவம்: இதில் தாண்டவப் பெருமானுடைய கைகளில் துடி, சூலம், தீச்சுடர், பாம்பு, பாசம் என்னும் பொருள்கள் காணப்படுகின்றன. ஆனால் முக்கியமாக முதன்மை இடம் பெற்றிருப்பது பாசக் கயிறு. இடக்கை, வலக்கை என்னும் இரண்டு கைகளினாலும் பாசக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு அதைத் தலைக்கு மேல் தூக்கியிருப்பதனாலே, இந்தத் தாண்டவத்தில் பாசக் கயிறு முக்கிய இடம் பெற்றிருப்பதை அறியலாம். பாசக்கயிறு ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் குறிக்கிறது என்று காமிகாமம் கூறுகிறது. உயிர்களை மேன்மேலும் வினை செய்வதில் அழுத்தி, அதன் மூலமாக உயிர்களுக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் ஏற்படச் செய்வதற்காக மறைத்தல் செயலை இறைவன் செய்கிறார் என்னும் சாத்திரக் கருத்தை இத்தாண்டவம் விளக்குகிறது. பாசக்கயிறு முதன்மையிடம் பெற்றிருப்பதனாலே இத்தாண்டவம் மறைத்தல் செயலைக் குறிக்கிறது.

5. அருளல் தாண்டவம்: இதற்குக் காளி தாண்டவம் என்றும், சண்ட தாண்டவம் என்றும், ஊர்த்துவ தாண்டவம் என்றும், அனுக்கிரக தாண்டவம் என்றும் பெயர்கள் கூறப்படுகின்றன. இந்தத் தாண்டவத்தின் தனிச்சிறப்பு என்னவென்றால் குஞ்சிதபாதமாகிய தூக்கிய திருவடியும், கஜஹஸ்தமாகிய நீட்டிய கையும் தாண்டவப் பெருமானுடைய தலைக்கு மேலே சென்றிருத்தலேயாம். ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களுடன் இருந்த ஆன்மாவை, அவற்றினின்றும் பிரித்தெடுத்து, அதனைத் தூய்மையும் ஒளியும் உடையதாகச் செய்து, உயர்ந்த பேரின்ப நிலையையடையச்செய்கிறதை இந்தத் தாண்டவம் காட்டுகிறது. ஊன்றிய பாதத்தின் கீழேயுள்ள முயலகன் மும்மலங்களைக் குறிப்பதாகும். தூக்கிய திருவடி மலம் நீங்கித் தூய்மையடையப் பெற்ற ஆன்மாவைக் குறிக்கிறது. 'அரனடி என்றும் அனுக்கிரகம் என்னே' என்பது திருமந்திரவாக்கு. "முத்தி நான்ற மலப்பதத்தே நாடு" என்பது உண்மை விளக்கம். "அடுத்து இன்னுயிர்கட்கு அளவில் பேரின்பம் கொடுப்பது முதல்வ, நின் குஞ்சித பாதமே" என்பது சிதம்பரமும் மணிக் கோவை. எனவே இத்தாண்டவம் அருளல் என்னும் செயலைக் குறிக்கிறது.



ஸ்ரீ அனந்தபத்மநாபசுவாமி திருக்கோயில் - அனந்தபுரா.

**वृश्चकं चरणं कृत्वा पादस्याङ्गु ष्टकेन तु ।**
**ललाटे तिलकं कुर्यात ललाटतिलकं तु तत् ।।**

6. ஆனந்த தாண்டவம்; இது வரையில் கூறப்பட்டவை ஐஞ்செயல்களைத் தனித்தனியே காட்டுகிற தாண்டவங்களாகும். இந்தத் தாண்டவம் ஐஞ்செயலையும் ஒரே உருவத்தில் அமைத்துக் காட்டுகிறது. இதில் துடி ஏந்திய கை ஆக்கல் செயலையும் அபயக் கை காத்தல் செயலையும், ஊன்றிய திருவடி மறைத்தல் செயலையும், தூக்கியத் திருவடி அருளல் செயலையும் குறிக்கின்றன. இதனை,

" தோற்றம் துடியதனில், தோயும்
திதி அமைப்பில்
சாற்றிடும் அங்கியிலே சங்காரம—
ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில்
உற்றதிரோதம், முத்தி
நான்ற மலப்பதத்தே நாடு"

என்னும் உண்மை விளக்கச் செய்யுளால் அறியலாம்.



**(8-ம் பக்கத் தொடர்ச்சி)**

கலந்த பிறகு எந்த நதியின் ஜலம் என்று தெரியாமல் ஐக்யமாய் விடுவது போல், ஜீவன்கள் ப்ரம்மத்தில் ஐக்யமாய் ஒன்றுகி விடுகிறது என்ற அத்வைத சித்தாந்தத்தை ஏற்காமல், நாம் ஐக்யம் என்றும் பதத்திற்கு ஸமம் எனப் பொருள் கொண்டு அந்த ப்ரம்மத்திற்கு ஸமமாகிருய் என்பதுதான் விசிஷ்டாத்வைதம். நான் ப்ரம்மம் ஆகிறேன் என்பது அத்வைதவாதம். இதற்கு இந்த ப்ரம்மம் "நான்எல்லா பொருளுமாக ஆகிறேன். நான் இந்த ஜீவன் ப்ரம்மத்தின் ஆத்மாவாய் இருக்கும் தன்மையை உணர்ந்தேன்" என்பது நமது சித்தாந்தம். அயம் ஆத்மா ப்ரும்மா என்ற சுருதி வாக்யத்திற்கு, இந்த ஜீவனே ப்ரம்மம் என்பது அத்வைதம். இதற்கு நம் சித்தாந்தத்தின் படி,இந்த ஜீவனுக்கு ப்ரம்மம் ஆத்மா என்பதுதான். 'ப்ரம்ம வித் ப்ரம்மைவபவதி' என்ற வாக்யத்திற்கு ப்ரம்ம ஞானத்தை அடைந்தவன் ப்ரம்மமாக ஆகிவிடுகிறுன் என்பது அத்வைதவாதம். நம் சித்தாந்தப் படி ப்ரம்மத்திற்கு ஸமமாகிறுன் என்பது நமது வாதம்.

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் படி, பரமாத்மா ஸ்ரீமந் நாராயணனே என்பதாகும். தைத்ரீய உபநிஷத்தும்,

"நாராயணம் பரம்ப்ரம்மா தத்வத்
நாராயணப் பர:
நாராயண பரோ ஜ்யோதிர் ஆத்மா
நாராயணப் பர:

என்று கூறுகிறது. பரம் பரம் என்ருல் மிக மிக உயர்ந்தது என்று பொருள். ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தின்படி பிராட்டியோடு கூடின எம்பெருமானே பரத்வம் என்கிறது. இதையே நம்மாழ்வாரும் திருவாய் மொழியில் 'அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா' என்றும், 'கடிமலராள் பிரியாத அத்திகிரி அருளாளன்' என்று ஸ்வாமி வேதாந்த தேசிகரும் அருளிச் செய்துள்ளார்கள்.

ஆத்மா அழிவற்றது. உலகிலுள்ள ஜடப்பொருள்கள் அழியக் கூடியது. அழிவு என்பது பூர்ணமாய் சூன்யமாய் விடுவதில்லே. எப்படியெனில் மண்ணுல் செய்த குடம் உடைந்தால், ஓடுகள் பலவாகும். அதையும் அழித்தால் முடிவில் மண்ணுகி விடுகிறது. இவ்விதம் ஆத்மாக்கள் தான் புகும் சரீரங்களுக்கேற்ப உருவ மாறுபாடடைகிறதேயல்லாமல், வஸ்துக்கள் ஒன்றுமே இல்லாமல் சூன்யமாய் விடுவதில்லே. இக்கொள்கையும் நம் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு முக்யமானதாகும்.

ஜீவ ஈஸ்வர சம்பந்தம் :

ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள சம்பந்தம் அனுதியானது. தொன்று தொட்டே சம்பந்தம் இருந்து வந்துள்ளது. இதைப் பெரியாழ்வாரும் திருப்பல்லாண்டில் 'அடியோமோடும் நின்னேடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு' என்றும், சூடிக் கொடுத்த நாச்சியாரும் திருப்பாவையில் 'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், உன் தன்னேடு உற்றேமேயாவோம், உனக்கே நாமாட் செய்வோம்' என்றும் அருளிச் செய்ததிலிருந்து தெரிய வருகிறது.

முடிவுரை :

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு சரீர ஆத்ம பாவமே பிராதனப்ரதிதந்தரமாகும். அதாவது சரீரிசரீர பாவம். ஈஸ்வரன் சரீரி, இப்பிரபஞ்ச முழுவதும் அவனுடைய சரீரமாகும். இக்கொள்கை வேறு எந்த மதத்திலும் இல்லாததும், நமது சித்தாந்தத்திற்கேயுடைய விசேஷமான கொள்கையாகும். அதாவது ஈஸ்வரனுக்கு சித் என்கிற ஜீவாத்மாவும், அசித் என்கிற ஜடப் பொருள்களாலான ஊனும் உடலும் அமைய இறைவன் உடலில் இருந்து உயிர்போல் இருக்கிறுர் என்பதாகும். இந்த தத்வத்தை நம்மாழ்வாரும் திருவாய் மொழியில் முதல் பத்தில் 'உடல் மிசை உயிரென கரத்தெங்கும் பரந்துளன்' என்று ஈரச் சொற்களால் காட்டியிருக்கிறுர்.

காண்கின்ற உலகம், ஜீவன் எல்லாம் அத்வைத சித்தாந்தப்படி மாயை அல்ல, உண்மையே. பகவானுக்கு உடலான ஜீவாத்மாக்களும், ஜடப் பொருள்களும், நித்யமானபடியாலே, எக்காலத்திலும், ஈஸ்வரன் இவற்றுடன் கூடினவனுகவே யுள்ளான். இவற்றை விட்டு ஈஸ்வரனே, ஈஸ்வரனை விட்டு இவைகளோ, தனியாக இருப்பது என்பது ஒரு பொழுதும் கிடையாது. விசேஷமாக ஈஸ்வரன், சித் என்ற ஜீவாத்மாக்களுடனும் அசித் என்ற ஜடப் பொருள்களுடனும், உடலும் உயிருமாகக் கூடியிருக்கிறது ப்ரம்மம் என்ற கருத்தையே விசிஷ்டாத்வைதம் என்ற பதத்தில் உள்ள விசிஷ்டம் என்ற சொல் குறிக்கிறது. தவிர ஆனந்தமயமான திவ்ய ரூபம், சமஸ்த கல்யாண குணங்களோடும் கூடியிருப்பதாலும் அப்ப்ரம்மம் ஸர்வ ஸ்வதந்தரமானதும், மற்றும் பல பெருமைகளையுடையதுமாகவும் விளங்குகிறது. இதற்கு ஸமமாகவோ, மேம்பட்டதாகவோ மற்றெரு தத்துவம் இல்லே. ஒப்பாரும் மிக்காரும் இல்லாத விசிஷ்டமான உயர்ந்த பரம்பொருள் தனக்குரியராகவோ, மேம்பட்டதாகவோ மற்றென்று இல்லாமல் இருத்தலேயே 'விசிஷ்டாத்வைதம்' என்பதாகும். இந்த சித்தாந்தத்தை நல்ல சதாசாரியனிடம் காலக்ஷேபம் செய்வதிலுைம், பூர்வாசாரியர்களான நம்மாழ்வார் ஆளவந்தார் ஸ்ரீமத்ராமானுஜர் முதலானவர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளினுலும்,அருளிச் செயல்களிலிருந்தும், ரஹஸ்யத்ரயங்களான 'திருமந்திரம், திவ்யம், சரம ஸ்லோகாம்' முதலானவைகளின் தத்வார்த்தங்கள் மூலமாயும் பூர்ணமாய் அறிய முடியும் என்பது ஆன்றேர் வாக்காகும்.

*



வைத்து நியமநிஷ்டையுடன் கிரமமாக பூஜை செய்து விரத மஹிமையின் கதையையும் படித்துக் கேட்க வேண்டும். அன்றய தினம் பூஜையில் வைத்த நோன்புக் கயிற்றை வலது கையில் அணிந்து கொள்ள வேண்டும்.

விரத மஹிமை :

தேவர்கள் வசிக்கும் கைலாஸ பர்வத சிகரத்தில் பரமசிவன் பார்வதி தேவியுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கிருர். அச்சமயம் பார்வதி "நாதா! நான் தங்களை ஜெயித்துவிட்டேன்" என்ருள். பரமசிவனும் "பார்வதி! நான் உன்னை ஜெயித்துவிட்டேன்" என்ருர். இப்படி இருவருக்கும் வாக்குவாதம் முற்றியது.

அப்பொழுது அங்கிருந்த 'சித்ரநேமி' என்ற தேவனை இருவரும் மத்யஸ்தம் கேட்க, அவன் பக்ஷபாதத்தால், 'பரமசிவன் வெற்றிக் கொண்டார்' எனக் கூறினுன். அதற்குப் பார்வதி அவன் மீது கோபம் கொண்டு "நீ பொய் சொன்னதால் குஷ்டரோகியாகி ஒளியிழந்து தவிப்பாயாக" என்று சபித்தாள்.

# ★ ஸ்ரீ வரலக்ஷ்மி விரதம் ★

சிராவண (ஆடி அல்லது ஆவணி) மாதம் பௌர்ணமிக்கு முன் வரக் கூடிய வெள்ளிக்கிழமையன்று சுமங்கலிகள் இந்த விரதத்தை அனுஷ்டித்து வரலக்ஷ்மிக்குப் பூஜை செய்ய வேண்டும். அன்றைய தினம் வீட்டைப் பசுஞ் சாணத்தால் மெழுகிக் கோலமிட வேண்டும். புஷ்பங்களாலும், மாவிலைகளாலும் ஒரு மண்டபம் போல் அமைத்து, அம்மண்டபத்தில் முதலில் ஒரு அடி சச்சதுரமாக நெல்லைப் பரப்பி, அதன்மீது ஒரு தாம்பாளத்தில் அரிசியைப் பரப்பி, அதன் மீது ஒருவெள்ளி அல்லது செப்புக்குடத்தை வைத்து அதை அரிசி அல்லது ஜலத்தால் நிரப்பி, மாவிலைக் கொத்து, தேங்காய் வைத்து கலசம் செய்து அதில் வரலக்ஷ்மியின் முகம் போலச் செய்து, சந்தனம் அக்ஷதை புஷ்பங்களால் அலங்காரம் செய்து, அந்த கலசத்திற்குமுன் தேவியின் பிரதிமையையோ படத்தையோ

இதற்குப் பரமசிவன் வருந்தி, "தேவி! அவன்மீது நீ அருள் கூர்ந்து அவன்சாபத்தை அகற்றுவாயாக" என்றுபார்வதியை வேண்டினுர்.

அதற்கு மனமிரங்கிய பார்வதி தேவி, "எப்பொழுது அழகிய தடாக தீரத்தில் தேவ கன்னிகைகள் ஒன்று கூடி புண்ணியமான ஒரு விரதத்தை அனுஷ்டிப்பார்களோ, அப்பொழுது

உன் சாபம் நீங்கும்" என்று அருளினன். உடனே அவன் கீழே சாய்ந்து விட்டான்.

பிறகு சித்ரநேமி, சில தினங்களில் ஒரு தடாகக் கரையில் குஷ்டரோகியாகி அங்கு வாஸம் புரிந்து வந்தான். ஒரு நாள் அங்கே வந்த தேவப் பெண்களைக் கண்டான். தேவி பூஜையில் ஈடுபட்ட அந்தப் பதிவ்ரதைப் பெண்கள் தேவியை வணங்கி வழிபடுவதைக் கண்டு, "அம்மையீர், தாங்கள் செய்யும் பூஜை யாது? இதை நானும் செய்யலாமா? நான் பார்வதிதேவியின் சாபத்தால் குஷ்டரோகியாகித் துன்புற்றிருக்கிறேன். என் துன்பம் நீங்கும் வழியைத் தாங்கள் கூறியருள வேண்டும்" என்று வேண்டினன்.

அதற்கு அந்தப் பெண்கள் கூறியதாவது: "நாங்கள் இன்று 'வரலக்ஷ்மி விரதம்' என்னும் விரதத்தை அனுஷ்டிக்கிறோம். இது திவ்யமானது. கோரும் வரங்களை அளிக்க வல்லது. சூரியன் கடக ராசியில் இருக்கும்போது, அதாவது கங்கையும் யமுனையும் சேரும் காலத்தில் துங்கபத்ரா நதிக்கரையில், சிராவண மாதத்தில் சுக்லபக்ஷத்தில் வெள்ளிக் கிழமையன்று முறைப்படி மஹாலக்ஷ்மியைப்பற்றியதான இந்த விரதத்தைத் தொடங்க வேண்டும்.

தங்கத்தினல் நான்கு கைகளுடன் லக்ஷ்மியின் பிரதிமையைச் செய்ய வேண்டும். வீட்டைத் தோரணங்கள், கோலங்கள் முதலியவைகளால் அலங்கரிக்க வேண்டும். வீட்டின் கிழக்கு திக்கில், முக்கியமாக ஈசானிய மூலையில் ஒரு படி அரிசியைப் பூமியில் பரப்பி அதன்மீது ஒரு கலசத்தை வைத்துத் தீர்த்தத்தால் நிரப்ப வேண்டும். பொன்னையும், புஷ்பங்களையும், பழங்களையும், துளிர்களையும் அதன்மீது வைத்து புதிய வஸ்த்ரத்தையும் சுற்ற வேண்டும். அந்தக் கலசத்தின்மீது லக்ஷ்மியின் பிரதிமையை வைத்து முறைப்படி பூஜை செய்ய வேண்டும்".

இவ்வாறு தேவகன்னிகைகள் செய்த இந்த பூஜையை சித்ரநேமி பக்தி சிரத்தையுடன் இமைக் கொட்டாமல் பார்த்து வந்தான். ஹோமப் புகையை நுகர்ந்ததாலும், நெய்த் தீபத்தைக் கண்டதாலும் தன்னுடைய குஷ்ட நோய்நீங்கி அவன் தங்க நிறம் பெற்றான்.

இவ்வாறு ஒருமித்த மனத்துடனும் அமைதியுடனும் இந்த விரதத்தை மேற்கொண்டு ஐந்து சுமங்கலிப் பெண்மணிகளுக்கு வாயன தானம் செய்து, கதையைக் கேட்க வேண்டும். பிறகு மௌனமாக இருந்து ஐவகை ஆரத்திகளைச் செய்து பூஜிக்க வேண்டும்.

விரதம் அனுஷ்டிக்கப் போகிறவர்கள் ஒரு பாக்கு ஒரு வெற்றிலை (சுண்ணும்பு சேர்க்காமல்) இவைகளைக் கடித்து மெல்ல வேண்டும். அப்பொழுது வாய் சிவக்காமல் இருந்தால் இந்த விரதத்தை மேற்கொள்ளக் கூடாது). பிறகு 'நானும் முயற்சியுடன் எல்லாவற்றையும் அளிக்கவல்ல இந்த விரதத்தை மேற்கொள்கிறேன்' என்று கூறிய சித்ரநேமி தானும் விரதத்தைச் செய்து, தேவர்கள் அனைவரையும் அனுஷ்டிக்கச் செய்தான்.

பிறகு பிராம்மணனுக்கும், ஸன்யாஸிக்கும், தெய்வத்திற்கும், பிரம்மச்சாரிக்கும், சுவாஸினிக்கும் (சுமங்கலிக்கும்) முறையே ஐந்து வாயன தானங்களைச் செய்தான். அதன் பின், தேவிக்கு நமஸ்காரம் செய்து தன் இருப்பிடம் சென்றான். பிறகு கைலாயம் சென்று பார்வதி பரமேசுவரர்களை வணங்கி அவர்கள் அருகில் நின்று "தேவி வரலக்ஷ்மியின் அருளால் தங்கள் திருவடிகளைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது" என்று கூறி மீண்டும் வணங்கினன். அப்பொழுது பரமசிவன் "இன்று முதல் நீ இந்த கைலாஸத்தில் ஸகல போகங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பாயாக. பிறகு இந்த விரதத்தின் மகிமையால் வைகுந்த லோகம் சேரக்கடவாய்" என்று வாழ்த்தினர்.

முன்பு ஒரு சமயம் பார்வதிதேவியும் ஸத்புத்ர லாபத்திற்காக இந்த விரதத்தை அனுஷ்டித்தாள். அதன் மகிமையால் இவளுக்கு ஷண்முகன் தோன்றினன்.

மற்றும் குண்டினம் என்ற நகரத்தில் சாருமதி என்ற பெண் இந்த வரலக்ஷ்மி விரதத்தை உபதேசிக்கப் பெற்று, சிராவண மாதம் சுக்லபக்ஷ பூர்ணிமையுடன் கூடிய வெள்ளிக் கிழமையன்று தேவியை வரித்து ஸகல பாக்கியங்களையும் பெற்றாள்.

விக்கிரமாதித்யன் நந்தனிடமிருந்து ராஜ்யத்தைப் பெற்றான். மனைவியில்லாத நந்தன் இந்த விரதத்தைச் செய்து அழகிய மனைவியை அடைந்தான். அவன் மனைவியும் பிள்ளைபேற்றிற்காக இந்த விரதத்தை அனுஷ்டித்தாள். அதன் மூலம் மூவுலகையும் காக்கவல்ல திறமை மிக்க மகனை அவள் பெற்றாள்.

இப்படிப் பலர் அனுஷ்டித்ததால் அது முதல் இந்தச் சிறந்த வரலக்ஷ்மி விரதம் இவ்வுலகில் பரவியது.

எனவே சிராவண மாதம் சுக்லபக்ஷத்தில் இரண்டாவது வெள்ளிக் கிழமையன்று, வரலக்ஷ்மியை மகிழ்விக்கக்கூடியதான இந்த ஸம்பத் விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

லக்ஷ்மியை மகிழ்விக்கும் இந்த விரதத்தை அனுஷ்டிக்கும் பெண்மணி இவ்வுலகில் ஸகல போகங்களையும் அனுபவித்தபின் வைகுந்தம் சேருவாள்.

எல்லா சுக்லபக்ஷத்திலும் எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் மஹாலக்ஷ்மியை முறைப்படி பூஜித்த பின் சுவாஸினி பூஜை செய்தால், வாழ்நாள் முழுவதும் தனம், ஆரோக்யம் முதலிய ஸம்பத்துக்கள் எல்லாம் உண்டாகும். ஸந்தானம் விருத்தியாகும். சுமங்கலியாக வெகு காலம் வாழ்வார்கள்.

## சந்தாதாரர்களுக்கு. . . .

30-9-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

46 234 235 569 570 575 576 764 785 786 788 790 792 794 795 796 798 800 801 803 804 805 807 808 818 819 821 முதல் 824 827 839 840 1876 1879 1881 1891 1892 1896 1898 1900 1901 1904 1905 1906 1912 1913 1914 1920 1925 1928 1929 1930 1933 1934 1935 1940 1941 1943 1944 1952 1955 1956 1957 1960 1962 1972 முதல் 1975 1977 1981 1982 1984 1987 1988 1989 1992 1994 1996 2011 3222 3302 3303 3304 3308 3310 முதல் 3350 3352 3354 முதல் 3361 3363 முதல் 3374 3376 3377 3379 முதல் 3388 3390 முதல் 3394 3396 முதல் 3407 3409 முதல் 3412 3415.

இந்த வரலக்ஷ்மி விரத மஹிமையைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் வரலக்ஷ்மியின் அருளால் தன, தான்ய ஸம்பத்துக்கள் உண்டாகும்.

### மஹாலக்ஷ்மி மகிமை

'பரமாத்மாவின் வலது புறத்தில் ராதிகாதேவியாயும், இடது புறத்தில் லக்ஷ்மிதேவியாயும் இரண்டு உருவம் கொண்ட அந்த லக்ஷ்மி மஹாலக்ஷ்மி எனப்படுவாள். லக்ஷ்மி என்றால் கருணையுடன் பார்க்கின்றவள் எனப்பொருள். அந்தத் தேவி சுத்த தத்துவஸ்வரூபிணியாயும், கோபாலர்களாலும், கோபிகைகளாலும் சூழப்பெற்று, விஷ்ணுவுடன் வைகுந்தம் அடைந்து, அவருக்கு நாயகியாயிருந்து, சுவர்க்கத்தில் இந்திர ஸம்பத்து ரூபமான சுவர்க்க லக்ஷ்மியாயும், பாதாளத்தில் நாகலக்ஷ்மியாயும் ராஜாக்களிடத்தில் ராஜ்யலக்ஷ்மியாயும், கிருஹஸ்தனிடத்தில் கிருஹலக்ஷ்மியாயும், யக்ஞத்தில் தக்ஷிணா ரூபியாகவும், தாமரையில் அழகாயும், சந்திரடனித்தில் சந்திரிகையாயும், சூரியனிடத்தில் காந்தியாயும், ஆபரணம், பழம், ரத்தினம், நீர், அரசன், அரிசி, தெய்வீக மங்கை, கிரகம், உடை, சுத்தமான இடம், தேவபதுமை, அழகான பாத்திரம், மாணிக்கம், முத்துமாலை, வஜ்ரமணி, பால், சந்தனம், பயிர் முதலியனவற்றில் வசித்து, அதனால் விளையத்தக்க மிகுந்த பாக்கியமாயும் இருக்கிறாள்.

அந்த தேவியை விஷ்ணுமூர்த்தி பாற்கடலில் சித்திரை, புரட்டாசி, தை ஆகிய மாதங்களிலும், மங்கள வாரங்களிலும், பிரமன் புரட்டாசி மாத சுக்லாஷ்டமியிலும், மனு வருஷ முடிவிலும், மகர சங்கராந்தியிலும் பூஜித்தனர்.

மகேந்திரன், கேதாரன், நலன், சுபலன், நளன், உத்தானபாதன், துருவன், பலி, காசிபர், தக்ஷன், கர்த்தமன், சூரியன், பிரியவரதன், சந்திரன், குபேரன், வாயு, யமன், வன்னி, வருணன் ஆகியோர்களாலும், மனிதர்களில் சிறந்தவர்களாலும், ரிஷிகளாலும், உத்தமர்களாலும், இல்லறத்தார்களாலும், கந்தர்வகளாலும், நாகங்களாலும், பூஜிக்கப்பட்டிருக்கின்றவள். இவ்வாறு எல்லாவிடத்திலும் எல்லோராலும்பூஜிக்கப்பட்டு எல்லா சம்பத்துக்கும் அதிதேவதையாயும் சம்பத்ரூபமாயும் இருக்கின்றாள்.

லக்ஷ்மிதேவியானவள் எத்தகையவர்களை விட்டு தான் தனியே விலகிப் போகின்றேன் என்று கூறியுள்ளதைச் சற்றுநோக்குவோம்:

"தனது விருப்பங்களை எல்லாம் அளிக்கத்தக்க மந்திரம் கிடைக்கப் பெற்றும், எவன் அதனைப் பொருட்படுத்தாமல் வாழ்கிறானோ, எவன் பிற மாதர்களுக்குத் தொண்டு செய்து வாழ்கிறானோ, தொண்டு செய்யத் தகாவனுக்கு எவன் தொண்டு செய்கிறானோ, எவன் ஆசாரசீலமின்றி வாழ்கின்றானோ, நீசத்தொழில் செய்தெவன் வாழ்கிறானோ, பிறர்மீது பழி கூறுவதையே தொழிலாகக் கொண்டு எவன் வாழ்கின்றானோ, எவன் நிஷ்டூரமொழி புகலும் குணமுடையவனோ, எவன் வீண் ஆடம்பரம் உடையவனோ, அத்தகைய குற்றமுள்ள மனிதர்களை உதறி விட்டுக்கைவிட்டுச் சென்றுவிடுவேன்.

இனியும் சில கூறுகின்றேன் கேளீர். எப்பொழுதும் துரும்புகளைக் கிள்ளிக் கொண்டிருப்பவன், நகத்தினால் தரையைக் கீறுபவன், பாதங்களை நன்றாகக் கழுவாதவன், பற்களைச் சிறிதே துலக்கி அழுக்குத் தோன்ற மினுக்குபவன், கிழிந்த ஆடைகளை அணிபவன், படியாத தலைரோமம் உடையவன், இரு சந்தி நேரங்களிலும் ஆடையின்றி உறங்குபவன். உண்ணும்போது பெரும் கவளம் கவளமாக உண்ணுபவன், பெரிதாகச் சத்தம் போட்டுச் சிரிப்பவன், உடம்பில் தட்டிச் தாளம் போட்டு வாத்தியம் வாசிப்பவன் இத்தகையோன் குபேரனாயினும் அவனை விட்டு நான் மறைந்து விடுவேன்.

ஆட்டின் கால் தூசி, கழுதைப் புழுதி, துடைப்பத்தின் தூசி, மாதர்களின் நடைப் புழுதி முதலியவை எந்த மனிதனுடைய மேனியில் பட்டாலும், அவன் இந்திரனுக்கு நிகரான செல்வம் உடையவனாயினும்

அத்தகைய செல்வ வாழ்வு பறி போய் விடும்".

செல்வமிக்க வாழ்வின் சிறப்பை இழந்தவர்கள் மீண்டும் இழந்தவற்றைப் பெற விரும்பிச் செய்யத் தக்கவை ;

நம் நாட்டில் ஒரு காலத்தில் பெரும் செல்வந்தர்களாக வாழ்ந்து தற்பொழுது நிலைகுலைந்திருக்கின்ற சில, பல குடும்பங்களைக் காண்கிறோம். அத்தகையோர் மீண்டும் அந்தச் சிறப்புமிக்க வாழ்வை இனிது பெற என்ன செய்ய வேண்டும். எவ்வாறு நடந்து கொண்டால் அத்தகைய திருவாழ்வு மீண்டும் கிடைக்கும் என்ற கேள்விக்கும் ஸ்ரீ லக்ஷ்மி தேவி தானே விடை கூறும் அழகு கவனிக்கத்தக்கது.

'வாசனைப் பொருந்திய நன்மலரை எப்பொழுதும் அணிந்துக் கொள்ளுதல். இரு பாதங்களையும் எப்பொழுதும் தண்ணீர்கொண்டு கழுவிச் சுத்தமாக வைத்திருத்தல். மிகவும் ரூபவதியும், குணவதியுமான மங்கையருடன் கூடிவாழ்தல். பெருந்தீனி இன்றி சாதாரண உணவு உண்டு திருப்தி அடைதல், இரவில் படுத்து உறங்கும்போது ஆடையுடன் படுத்தல். பருவதிதிகளிலும், காலற்ற, உடலற்ற, தலையற்ற ஆகிய நட்சத்திர நாட்களிலும் மங்கையரைக் கூடாதிருத்தல் இந்த ஆறு செயல்களையும் விடாமல் கைக்கொண்டு வாழ்வோர் இழந்த செல்வத்தை, இழந்த பதவியை, இழந்த புகழை, இழந்த சுக வாழ்க்கையை மீண்டும் பெற்று இன்புறுவர்.

நான் விரும்பாத மங்கையர் எத்தகையவர்?

பாவச் செயலில் மனம் கொண்டவள்—கோள் சொல்லும் குணம் உடையவள் — கணவனை வசம் செய்து அவமதிக்கும் சுபாவம் உள்ளவள்—சுய அதிகாரத்திலே விருப்பம் உடையவள் — பெருங்கோபக்காரி— கெட்ட நடத்தை உடையவள்— பிரேதக்களை உடைய முகம் உள்ளவள்—ஆகிய மங்கையரை நான் எந்தக் காலத்திலும் கண்ணெடுத்துப் பாரேன்.

ஈரக்காலுடன் படுத்துக்கொள்ளுதல்—திட்டான ஆடைகளைப் போர்த்திக்கொள்ளுதல் – மேல் கீழாகவும், கீழ் மேலாகவும் அலங்கோலமாக ஆடைகளை மாற்றி அணிந்து கொள்ளுதல் – உலர்ந்த தூசி படிந்த காலோடு உட்கார்ந்து உணவு கொள்ளுதல் – ஆகியவை விலக்கத் தக்கன. ஒருமுறை உடுத்தி—அழுக்கான சுத்தமில்லாத, கிழிந்த ஆடைகளை அணியக் கூடாது. உடம்பு துர்நாற்றத்தோடு இருந்தால் சுகம் கிடைக்காது. ஆதலால் பரிசுத்தமாக அதைப் பாதுகாத்து வர வேண்டும். அந்த உடம்பில் அதாவது அவர்கள் மீது நான் அன்போடு உடனிருந்து வாழ வேண்டுமானால், அவர்கள் ஏதேனும் ஆபரணம் அணிந்து கொள்ள வேண்டும். மலர் சூட்டிக் கொண்டு இருந்து வர வேண்டும். மலர் மணமும் ஆபரண அழகும் இல்லாதவர்களின் மேனியில் நான் வாழ விரும்பமாட்டேன்.

உலக மக்களே! நீங்கள் என்னுடைய வாஸத்தை (அருளை) விரும்பினால், நான் கூறுகின்றவற்றை நன்கு கைக் கொண்டு ஒழுக வேண்டும்". என ஸ்ரீ லக்ஷ்மிதேவி தன்னைத் தொழுவோர்க்கு அருளியுள்ளாள்.

ஆகவே வாழ்வின் நலன்களனைத்தையும் பெற விரும்பும் மாந்தர் அனைவரும், வரங்கள் தந்து மானுட ஜாதியை உயர்விக்கும் பெரிய பிராட்டியான வரலக்ஷ்மிதேவியின் அருளைப் பெற அவர் உரைத்த படியே நடந்து வாழ்வின் ஸகல ஸௌபாக்யங்களையும் குறைவின்றிப் பெற்று நெடுங்காலம் இன்புற்று வாழ்வாங்கு வாழ்வார்களாக.

நமாமி ஸர்வ பூதானாம் ஜநநீம்
பத்மஸம்பவாம் |
ச்ரியம் முந்நீத்ர பத்மாக்ஷீம்
விஷ்ணோர் வக்ஷஸ்தலஸ்தி
தாம் ||

தாமரை மலரில் திருப்பாதங்கள் அமைய இங்கு எழுந்து அருளியிருக்கும் தேவி! நீ உயிர்களுக்கு எல்லாம் தாயாகின்றாய். தாமரை மலர்களை போன்று விரிந்த அழகான கண்களை உடைய உன்னைக் கருத்தில் இருத்தி வணங்குகின்றேன்' திருமாலின் மார்பில் உறையும் திருவே! மனம், மொழி, மெய்களால் போற்றுகின்றேன். தாயே! தவம் இருந்து, விரதம் மேற்கொண்டு, நிட்டையுடன் வேண்டுவோருக்கு வரங்கள் அளித்து அருள் புரியும் சக்தி வடிவமாக விளங்குபவள் நீ. உனக்கு அநந்த கோடி நமஸ்காரம்.



தொகுத்தெழுதி அனுப்பியவர்:
திரு. எஸ். சந்திரமௌலி ஸ்வாமி,
*திருப்பதி.*



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

